

இந்தியப் பண்பாடு-வரலாறு

25



மனமாற்றம் ஏன்?

19



மர்மக்குளம்

11



விநாயகர்

45

## பொருளடக்கம்






SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120

**புக்போஸ்டில்**

உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

## இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள்-7

இந்தியா சாஸ்திரிய சங்கீதவளம் பெற்றது. இங்கு சில இசைக் கலைஞர்களைப்பற்றிய விணாக்களைக் கேட்கிறோம். விடைகள் தெரிகிறதா என்று பாருங்கள்.

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1. கர்நாடக இசை உலகில் இசை மேதைகள் மூவருள் ஒருவர் 24000 கீர்த்தனைகள் இயற்றியுள்ளார் அவருடைய சமாதி காவேரி நதிக்கரையிலுள்ள திருவையாற்றில் உள்ளது. இவர் யார்?

---

2. தபலா வாசிப்பில் பெயர் பெற்ற ஒருவரின் மகன் ஜாகிர் ஹுசைனும் சிறப்பாக தபலா வாசிப்பரே. இவரது தந்தையின் பெயர் என்ன?

---

3. இவர் அக்பரின் தர்பாரில் இருந்தவர் இவர் தீபக் ராகம் பாடினால் விளக்குகள் உடனே எரிந்து ஒளிவிடுமாம். இவர் யார்?

---

4. இவர் ஷஹ்னாயை இசைப்பதில் வல்லவர். சென்ற ஆண்டில் இவருக்கு 'பாரதரத்னா' விருது வழங்கப்பட்டது. இவர் யார்?

---

5. இவர் பணக்காரர். பெயர் ஸ்ரீநிவாசநாயக். இவர் பிற்காலத்தில் துறவறம் மேற்கொண்டார். இவர் கர்நாடக இசைக்கு அஸ்திவாரம் போட்டவர். இவர் யார்?

---

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த தேசிய மாவீரர் ......................................

.........................................................

.........................................................

போட்டியாளரின் பெயர்: ..............................

வயது: ................. வகுப்பு: ..............................

முகவரி: ..............................................

.........................................................

பின்கோடு: ........................ போன்: ..........................

போட்டியாளரின் கையொப்பம்: ..............................

பெற்றோரின் கையொப்பம்: ..............................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-7**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி மே 5, 2002

**நிபந்தனைகள்:**

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்ட சிறார்களுக்கு மட்டுமே.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

# பூமி தினத்தில் ஓர் எண்ணம்

நாம் பூமியில் வாழ்ந்து அது கொடுக்கும் மண், அதனுள் புதைந்திருக்கும் செல்வம், செடி, கொடி மரங்கள், நீர், மிருகங்கள், பறவைகள் என யாவற்றாலும் பயனடைகிறோம். ஆனால் பூமியில் நாம் குடித்தனக்காரர்கள் என்பதை மறந்துவிடக் கூடாது.

ஆனாலோ இதை நாம் கருத்தில் கொள்ளாமல் இதன் சொந்தக்காரர்கள் நாமே என்று எண்ணிவிடுகிறோம். நமக்கு இங்கு கிடைப்பதை எல்லோருடனும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும் என்று நினைப்பதில்லை. நமது பேராசையால் சிலவற்றை நாசப்படுத்தி விடுகிறோம். இம்மாதிரி செய்து கொண்டேபோனால் விரைவில் உலகின் செல்வங்களை எல்லாம் அழித்து விடுவோமே!

இப்போது புதிதாகக் கிளம்பியுள்ள ரசாயனக் கிருமிகள் போர் முறை மனிதர்களயும் மிருகங்களையும் பறவைகளையும் மரம், செடி, கொடிகளையும் அழிக்கிறது. நீரையும் காற்றையும் மாசுபடுத்துகிறது. வாழ்க்கையையே வெறுக்கச் செய்கிறது. மக்களின் பலதலைமுறைகள் பூமியில் வாழ்ந்து வருகின்றன. அதுபோல் மிருகங்களும் தாவரங்களும் உள்ளன. ஆனால் இவற்றில் பல அழிந்து கொண்டிருக்கின்றன.

பூமிதினம் ஏப்ரல் 22ல் வருகிறது.

நம் பிற்கால சந்ததியார் வாழ பூமியைப் பாதுகாருங்கள் என உரக்கக் கூறவேண்டும். பூமியின் செல்வங்களைப் பாழ்படுத்தமாட்டோம் என்ற உறுதிமொழியை இன்றே எடுத்துக் கொள்வோம்.

---

ஆசிரியர் : **விஸ்வம்**



# நீ தான் ராட்சஸன்!

ஆசைத்தம்பி என்பவன் எங்காவது புதையல் கிடைக்குமா என்று தேடி அலைந்து திரிந்து கொண்டிருந்தான். அவன் ஒரு காட்டிற்குள் சென்ற போது ஒரு ராட்சஸன் அவனைப் பிடித்துக் கொண்டான். ராட்சஸன் அப்போது, ''பயப்படாதே! நான் சொல்வதைக் கேள். நான் நீண்ட கால மாக பலவித ஜீவராசிகளைப் பிடித்து விழுங்கி வருகிறேன். ஒரு முறை ஒரு முனிவரைக் கண்டு பயபக்தியுடன் ''சுவாமி! எனக்கு மனிதப் பிறப்பு கிடைக்க அருளுங்கள்'' என்று வேண் டினேன். அவரும் நான் ஏதாவது ஒரு புண்ணிய காரியத்தைச் செய்தால் மனிதப் பிறவியை அடைந்துவிட லாம் எனக் கூறினார். எனவே, நான் புண்ணிய வேலை செய்ய வேண்டும். இப்போது எனக்கு நீ கிடைத்திருக் கிறாய். உனக்கு என்ன வேண்டுமோ கேள். அதைக் கொடுத்து புண்ணியம் செய்துவிடுகிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட ஆசைத்தம்பி மகிழ்ந்து போனான். தன்னை ராட் சஸன் விழுங்கிவிடுவான் எனப் பயந்து கொண்டிருந்த அவன் ராட்ச ஸன் எது வேண்டுமோ கேள் என்றதும் ''எனக்கு புதையல் கிடைக்கச் செய்!'' என்று கேட்டான். ராட்சஸனும் ''அது கிடைத்தால் என்ன செய்வாய்?'' என்று கேட்கவே, அவனும் ''பெரிய மாளிகை வாங்கிக் கொண்டு நான்கு மல்வீரர்களை வைத்து என் பேச்சிற்கு எதிர்பேச்சு பேசுபவர்களை எல்லாம் அடித்து உதைக்கச் சொல்வேன். நான் மனதார விரும்பும் மலர்க் கொடி யைத் தூக்கி வந்து மணந்து கொள் வேன்'' என்றான்.

அதுகேட்டு ராட்சஸன் பலமாகச் சிரித்து ''இதற்கு மல்வீரர்கள் எதற்கு? அடி உதை என்றெல்லாம் எதற்கு? மேலும் நீ விரும்பும் மலர்க்

- சிவனார் செல்வன் -

கொடியின் மனதை உன் பக்கம் திருப்பிவிடுகிறேன்'' என்றான். அப்போது ஆசைத்தம்பி ''எனக்கு முதல் மனைவி இருக்க, அவள் எனது இரண்டாவது மனைவியாக சம்மதிக்கமாட்டாளே!'' என்றான். ராட்சஸனும் ''அப்படியானால் நீ ஏன் மலர்க்கொடியை மணக்க முயல்கிறாய்?'' என்று கேட்டான்.

ஆசைத்தம்பியும் ''என் மனைவியை காளிதேவிக்கு பலியிட்டால் புதையல் கிடைக்கும் என்று ஒரு மந்திரவாதி கூறினான். அவளை நான் காளிதேவிக்குப் பலியிடப் போகும் போது அங்கு அரசாங்க வீரர்கள் வந்து விட்டார்கள். அவர்கள் ''கொலையா செய்கிறாய்? உன்னை பிடித்து நீதி மன்றத்தில் நிறுத்துகிறோம்'' எனவே, நான் அவர்களுக்கு அகப்படாமல் தப்பி ஓடி வந்துவிட்டேன். இப்போது எனக்குப் புதையல் கிடைத்தால் முதலில் என்னைப் பிடிக்க முயலும் காவலதிகாரிக்கு லஞ்சம் கொடுத்து என் மீது போடப்பட்டுள்ள வழக்கை அமுக்கி விடுவேன். இக்காரணங்களால் தான் நான் புதையலை அடைய விரும்புகிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட ராட்சஸன் ''நீ உன் முதல் மனைவியைக் கொலை செய்ய முயன்று அதிலிருந்து தப்பிக்க அதிகாரிக்கு லஞ்சம் கொடுக்க நினைக்கிறாய். பணபலத்தால் முரடர்களை வைத்துக் கொண்டு வன்முறையில் இறங்கக்கூடியவன். நீ மட்டும் விரும்பும் பெண்ணை பலவந்தமாகக் கவர்ந்து வந்து மணக்க நினைக்கிறாய். இவற்றைக் கொண்டு பார்த்தால் நீ மனிதன் அல்ல. ராட்சஸ குணம் படைத்தவன். எனவே நீ உலகில் இருக்கக் கூடாது'' என்று கூறி அவனைக் கொன்று விழுங்கி விட்டான்.

அப்போது அவன் முன் அவனுக்கு வரம் அளித்த முனிவர் தோன்றி ''பேஷ். இப்போது நீ செய்தது புண்ணிய காரியம். உலகில் ஒரு கொடியவனை அழித்து மக்களுக்கு நன்மை புரிந்தாய். அதனால் உன் ராட்சஸப் பிறவி மறைந்துவிட்டது. நீ மனிதனாகிவிட்டாய். நீ நற்குணங்களைக் கொண்ட மனிதனாக நெடுங்காலம் வாழ்வாயாக!'' என்று கூறி ஆசிகளை அளித்துவிட்டுச் சென்றார்.





# மர்மக் குளம்

## 2

*(ஜெயசீலன் ஒரு மயானத்தில் ஒரு விசித்திர உருவத்தைக் கண்டு அதன் தலையை வெட்டி சித்தசாதகனைக் காப்பாற்றினான். அதன்பின் அவன் சற்று தூரத்தில் தென்பட்ட ஒரு வீட்டிற்குப் போய் அதிலிருந்த கிழவியுடன் பேசிக் கொண்டிருக்கையில் ஹிரண்யபுரக் காவலதிகாரி இரு காவல் வீரர்களுடன் வந்து அந்த வீட்டின் கதவைத் தட்டினான். அதன் பிறகு -)*

வாசல் கதவைத் திறக்கப் போன கிழவி சட்டென நின்று ஜெயசீலனிடம், ''நீ அரசாங்க வீரர்கள் கண்ணில் படாமல் தலைமறைவாக இருப்பவனா? ஏதாவது பெரிய குற்றத்தைச் செய்தவனா?'' என்று கேட்டாள். அவனும் ''நான் எவ்விதக் குற்றமும் புரியவில்லை. ஏதாவது வேலை கிடைக்குமா என்று ஊர் ஊராக அலைந்து கொண்டிருக்கிறேன்'' என்றான். அதைக் கேட்ட கிழவி திருப்தி அடைந்து கதவருகே போய் அதைத் திறந்தாள்.

நகரக் காவலதிகாரி வாசல்படியில் நின்றவாறே, ''ஒரு வழக்கு விஷயமாய் நான் வந்திருக்கிறேன். யாராவது ஒரு வாலிபன் வாளுடன் இங்கு வந்தானா?'' என்று கேட்டான். அப்போது ஜெயசீலன் வாசலுக்கு வரவே, காவலதிகாரியுடன் வந்தவன் ''ஆ! இவன் தான் என் தந்தையின் தலையை வெட்டியவன்! ஆனால் மீண்டும் அவர் தலை உடலில் பொருந்தவே உயிர் பெற்றுவிட்டார்,'' எனக் கூவினான். அப்போது சித்தசாதகன் ''ஏன் கத்துகிறாய்? தலை வெட்டப்பட்டவன் மீண்டும் பிழைத்து வந்தான் என்பது எங்காவது



நடந் திருக்கிறதா? இவன் காலனைத் தான் தன் வாளால் தாக்கினான். அதனால் இவனது வாளுக்கு அபூர்வ சக்தி கிடைத்துவிட்டது'' என்றான்.

அப்போது ஜெயசீலன் அந்த அதிகாரியிடம், ''ஐயா! என் பெயர் ஜெயசீலன். நான் அமராவதி நகர வாசி. மயானத்தில் ஒரு பயங்கர உருவம் என்னைத் தாக்கியது. தற் காப்பிற்காக அதன் தலையை நான் வெட்ட வேண்டியதாயிற்று'' என்றான். அப்போது காவலதிகாரி ''என் கூட இருப்பவர்கள் எதை எதையோ கூறிக் குழப்பிக் கொண்டு இருக்கிறார்கள். யாரோ காலன் இறந் தான், பிறகு பிழைத்தான் என்றெல் லாம் நம்ப முடியாத விஷயத்தைக் கூறிக் கொண்டு இருக்க இந்தத் தலை வலி எனக்கு எதற்கு? எல்லோரையும் மந்திரி முன் கொண்டு போய்விட்டு விடுகிறேன். அவர் விசாரித்தாலும் சரி, உங்களை விட்டு விட்டாலும் சரி. எனக்குக் கவலையில்லை. இப்போ தைக்கு என்னோடு வாருங்கள்'' எனவே, அவர்கள் யாவரும் அந்த அதிகாரியின் பின்னால் சென்றார்கள்.

அவர்கள் அரண்மனையை அடைந்தபோது மந்திரியும் அப் போது தான் அரண்மனை வாசல் வழியாக அரண்மனைக்குள் போய்க் கொண்டிருந்தார். நகரக் காவலதிகாரி அவருக்கு வணக்கம் செலுத்தி, அவ ரிடம் தான் கொண்டு வந்த வழக்கைப் பற்றிக் கூறினான். அதை கவனமாய்க் கேட்ட மந்திரி சற்று நேரம் வரை யோசித்துவிட்டு, ''ஒருவன் தலை வெட்டப்படுகிறது. அவன் இறந்து விடுகிறான் என எல்லோரும் நம்பு கிறார்கள். ஆனால் இறந்த மனிதன் உயிர் பெற்று எழுந்தான் என்பதைத் தான் நம்ப முடியாமல் இருக்கிறது? அப்படி ஏதாவது நடந்திருந்தால் அது ஏதோ மந்திர சக்தியால் தான் நிகழ்ந் திருக்கும். எனவே இவன் கொலை செய்யவில்லை. தன்னைக் காத்துக் கொள்ளவே அந்த உருவத்தின் தலையை வெட்டினான். ஆனால் அது மீண்டும் உயிர் பெற்றுவிட்ட தால் இவனைக் குற்றவாளியாகக் கருத முடியாது'' என்றார்.

மந்திரி ஜெயசீலனைப் பார்க்கவே அவனும், ''ஐயா! சட்டங்களை அறிந் தவர் நீங்கள். நீங்கள் கூறும் தீர்ப்பை யாவரும் ஏற்கத் தானே வேண்டும்? இதனை நான் மனப்பூர்வமாக ஏற் கிறேன்'' என்றான். அப்போது மந்திரி

அவர்களை எல்லாம் அங்கேயே இருக்கச்சொல்லிவிட்டு மன்னனைக் காண அரண்மனைக்குள் சென்றார். அப்போது மன்னன் கனகாட்சன் சேனாதிபதியின் மகனான மங்கள வர்மனுடன் பேசிக் கொண்டிருந் தான். மந்திரியைக் கண்டதும் மன்னன் ''மந்திரியாரே! இளவர சனையும் இளவரசியையும் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வருவதாக மங்களவர்மன் கூறுகிறான். அதற்கு என் அனுமதியையும் கோருகிறான். உங்கள் அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டான்.

மந்திரியும் ''இதற்கு தேகபலமும் துணிச்சலும் அபூர்வ சக்திகளும் கொண்ட ஒரு இளைஞனே செல்ல வேண்டும். இந்த மங்களவர்மனால் செய்ய முடியுமா என்பது சந்தேகமே. இவனுக்குத் தேகபலம் இருந்தாலும் நுண்ணியஅறிவு உள்ளதா என்பது சந்தேகமே. இவனிடம் மந்திர சக்தி எதுவும் இல்லை. இப்போது நமக்கு அத்தகைய இளைஞன் ஒருவன் கிடைத்திருக்கிறான். அவன் பெயர் ஜெயசீலன். அவன் வைத்திருக்கும் வாளுக்கு அபூர்வ சக்தி உள்ளது'' என்றார். அதைக் கேட்ட கனகாட்சன் யோசிக்கத் தொடங்கினான். மங் களவர்மனோ கோபமாக, ''அரசே! இந்த ஜெயசீலன் உயர் குடிமகனா? தாங்கள் தங்கள் மகனையும் மக ளையும் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு வருபவர்களுக்கு பாதி நாட்டைக் கொடுப்பதாக அறிவித் திருக்கிறீர்கள். அதற்கான தகுதி



அவனுக்கு உண்டா?'' என்று கேட் டான். அதைக் கேட்ட மந்திரி எரிச் சலைடைந்து, ''இளவரசனையும் இளவரசியையும் கவர்ந்து சென்ற வர்கள் அபூர்வ சக்தி கொண்டவர் களாகவும் இருக்கலாம். அத்தகை யவர்களை எதிர்த்து வெற்றியை பெறுபவன் அவர்களை விட அதிக சக்தி வாய்ந்தவனாகத் தான் இருக்க வேண்டும். அப்படிப்பட்டவன் தாங்கள் அறிவித்த நாட்டைப் பெற் றுக் கொள்ளத் தகுதி பெற்றவனே!'' என்றார்.

மங்களவர்மன் அப்போது ''அவனது வாளுக்கு அபூர்வ சக்தி இருக்கிறது என்றால் அதைப் பரீட் சித்து பார்க்க வேண்டும்'' என்றான் தன் வெறுப்பைக் காட்டியவாறே. மன்னனும் ''இவன் கூறுவதும்



சரியே. ஜெயசீலனின் வாளை இவன் பரீட்சித்துப் பார்க்கட்டும். அது சக்தி வாய்ந்தது என்றால் அவனுக்கு உயர் பதவி ஒன்றை அளிக்கலாம்'' என்றான். மந்திரியும் ''அது சரி. அதற்கு எப்படிப்பட்ட பரீட்சை வைக்கலாம்?'' என்று கேட்டார். மன்னனும் ''இரண்டு கூண்டுகளில் இரு புலிகளை வைத்து கொண்டுவர வேண்டும். ஜெயசீலனின் வாளை மங்களவர்மன் எடுத்துக் கொண்டு கூண்டுகளிலிருந்து ஒரு பரந்த மைதானத்தில் விடப்படும் புலிகளுடன் சண்டை போட வேண்டும்'' என்றான். மன்னன் இவ்வாறு கூறியதைக் கேட்டு மங்களவர்மன் நடுநடுங்கிப் போனான். ஒரு வேளை ஜெயசீலனின் வாளுக்கு மந்திர சக்தி இல்லாவிட்டால் தான் புலிகளை எதிர்க்க முடியாமல் அவற்றிற்கு இரையாக வேண்டி வருமே என்று எண்ணிப் பயந்தான். ஆனாலும் பயப்படாதவன் போல அவன், ''ஓ! நான் புலிகளை எதிர்க்கிறேன்,'' என்றான்.

மந்திரி இதை ஜெயசீலனிடம் கூறவே, அவன் சற்றும் தயங்காமல் தன் வாளை மங்களவர்மனிடம் கொடுத்தான். கூண்டுகளில் அடைக்கப்பட்ட புலிகள் பரந்த மைதானத்திற்குக் கொண்டுவரப்பட்டன. கூண்டுகளிலிருந்து வெளியே மைதானத்தில் விடப்பட்ட அந்தப் புலிகளை எதிர்க்க மங்களவர்மன் ஜெயசீலனின் வாளுடன் சென்றான். ஆனால் இரு புலிகள் ஒரே சமயத்தில் தன் மீது பாய வருவது கண்டு அவன் பயந்து நடுங்கலானான். அவன் கையிலிருந்த வாள் கீழே விழுந்து விட்டது. இந்த ஆபத்தான நிலையைக் கண்ட ஜெயசீலன் சட்டென மைதானத்தில் குதித்து மங்களவர்மன் நழுவவிட்ட தன் வாளை எடுத்துக் கொண்டு சீறிப் பாயும் இரு புலிகளையும் எதிர்த்தான்.

இதைக் கண்ட கனகாட்சன் ஆச்சரியப்பட்டதோடு, ''ஆகா! வீரன் என்றால் இவன் தான் வீரன். இவனால் எதையும் செய்ய முடியும். இவனால் தான் இளவரசனையும் இளவரசியையும் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டுவர முடியும்! மங்களவர்மன் வாய்ச் சொல்வீரன். கோழை. தொடைநடுங்கி. மந்திர வாள் கையில் இருந்தும் கூட அவனால் புலிகளை எதிர்க்க முடியவில்லையே. அவற்றைக் கண்டு

பயந்துவிட்டானே! இவனாலா என் மகனையும் மகளையும் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டுவர முடியும்?'' என்று கூவினான். இதற்குள் ஜெய சீலன் போக்குக்காட்டி இரண்டு புலிகளில் ஒன்றை வேறாக்கி அதனைத் தன் வாளால் குத்திக் கொன்றான். இரண்டாவது புலி பின்வாங்கி ஓடிக் கூண்டிற்குள் போய்ப் படுத்து விட்டது. கனகாட்சனும் அங்கு கூடி இருந்த மற்றவர்களும் அதைக் கண்டு கைதட்டி ஆரவாரம் செய்தார்கள்.

மங்களவர்மன் வாளை நழுவ விட்டபோதே தன் நினைவை இழந்து விழுந்துவிட்டான். அவன் கண் விழித்துப் பார்த்தபோது ஒரு புலி இறந்து கிடப்பதையும் மற்ற புலி கூண்டினுள் படுத்துக் கிடப்பதையும ஜெயசீலன் வாளுடன் நிற்பதையும் கண்டான். அவன் எழுந்து மன்னனிடம் ''அரசே! அந்த வாள் அபூர்வ சக்தி வாய்ந்தது தான். இதில் சந்தேகமே இல்லை'' என்றான்.

மந்திரியும் ''மங்களா! நீயே அந்தக் கத்திக்கு அபூர்வ சக்தி இருப்பதை ஒப்புக் கொண்டாய். உன்னால் அதைப் பிடித்து புலியைத் தாக்க முடியவில்லை என்பதனையும் நிரூபித்துவிட்டாய். இதனால் உன்னால் இளவரசனையும் இளவரசியையும் தேடிக் கண்டுபிடித்து இங்கு அழைத்துவர முடியாது என்பது நன்கு தெரிகிறது. எனவே இந்த வேலையை ஜெயசீலனிடம் தான் ஒப்படைக்க வேண்டும். ஏனென்றால் அவனிடம் மந்திர சக்தி வாய்ந்த வாளும், எந்த நிலையையும் எதிர்த்து வெற்றி பெறத் துணிச்சலும் உள்ளது,'' என்றார். அதைக் கேட்ட மங்களவர்மன் பதில் எதுவும் கூற





முடியாமல் வெட்கித் தலை குனிந்து நின்றான்.

அப்போது சித்தசாதகனும் ''நான் அப்போதே சொன்னேனே காலனே இந்த வாளுக்குள் அபூர்வ சக்தியைச் செலுத்தி இதை ஜெயசீலனிடம் கொடுத்தான் என்று. இது ஜெயசீலன் ஒருவனிடம் மட்டுமே இருக்க வேண்டும். இந்த சக்தி வாய்ந்த வாளைக் கையில் வைத்திருந்தும் மங்களவர்மன் புலியைத் தாக்க முடியாமல் வாளையே நழுவவிட்டு பயந்து தன் நினைவை இழந்து விழுந்ததை நாம் பார்த்தோமே. வாய்ச்சொல் வீரர்களிடம் இந்த வாள் இருந்தாலும் இது அவர்களுக்குப் பயன்படாது'' என்றான்.

இதன் பிறகு யாவரும் மன்னனுடன் அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அப்போது மயானக் காவலாளியின் மகன் மன்னனை வணங்கி நிற்கவே, மன்னனும் அவனைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டு ''சரி. நீ உன் தந்தை செய்து வந்த வேலையையே செய்து வா. உனக்கு ஊதியமும் உன் தந்தைக்குக் கொடுத்ததைப் போல இரு மடங்கு கொடுக்கப்படும். இனிமேல் வழக்கு, வாதம் என்றெல்லாம் செய்யாமல் உன் வேலை உண்டு, நீ உண்டு என்று இருந்துகொண்டு வேலையைச் செய்'' என்றான். அவனும் மன்னனை வணங்கிவிட்டு அங்கிருந்து சென்றான்.

மன்னன் மந்திரியுடனும் ஜெயசீலனுடனும் சித்தசாதகனுடனும் தர்பார் மண்டபத்திற்குச் சென்றான். அவன் தனது அரியாசனத்தில் அமர்ந்து மந்திரியிடம் ''மந்திரியாரே! இளவரசனையும் இளவரசிளையும் தேடிக் கண்டுபிடிக்க நாம் பல முயற்சிகள் செய்தும் அவற்றில் ஒன்றில் கூட வெற்றி பெறாமல் போய்விட்டோம். இப்போது துணிச்சலும் அபூர்வ சக்திகள் கொண்ட ஜெயசீலன் நமக்குக் கிடைத்திருக்கிறான். இவனிடம் அந்த வேலையை ஒப்படைக்கலாமா?'' என்று கேட்டான். மந்திரியும் ஜெயசீலனை ஏற இறங்கப் பார்த்தார். அப்போது சித்தசாதகன் ''இவனிடம் அந்த வேலையைக் கொடுத்துவிட்டால் அதைச் செய்து முடித்துவிட்டுத் தான் மறு வேலையைப் பார்ப்பான். இவன் அந்த வேலை செய்யச் சம்மதித்தால்

நான் இவனுக்கு உறுதுணையாக இவனுடன் செல்வேன்'' என்றான்.

அப்போது ஜெயசீலன் ''அரசே! நான் அண்டை நாட்டிலிருந்து ஏதாவது வேலை கிடைக்குமா என்று தேடிக் கொண்டே இங்கே வந்தவன். எனக்கு எந்த சிறு வேலையைக் கொடுத்தாலும் நான் அதைச் செய்யத் தயாராக இருக்கிறேன்'' என்றான்.

அப்போது மந்திரி மன்னனிடம் பேசிவிட்டு ஜெயசீலனைப் பார்த்து, ''ஜெயசீலா! மன்னர் உன்னைத் தன் உதவியாளனாக நியமித்திருக்கிறார். நீஅந்த வேலையை ஏற்றுக் கொள்கிறாயா?'' என்று கேட்டார். ஜெயசீலனும் ''ஆகா! மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறேன். இனி மன்னர் எனக்கு என்ன கட்டளை இட்டாலும் அதைச் செய்து முடிப்பேன். நான் என் பொறுப்பைத் தட்டிக் கழிக்க மாட்டேன்'' என்றான்.

மந்திரியும் ''பேஷ்! இது தான் சரியான நோக்கு. மன்னர் தன் மகனையும் தன் மகளையும் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டுவரும்படிக் கட்டளை இட்டிருக்கிறார். அதனை உன்னால் தான் செய்ய முடியும் என்ற நம்பிக்கை மன்னருக்கும் இருக்கிறது, எனக்கும் இருக்கிறது. உன்னிடம் மந்திர சக்தி வாய்ந்த வாள் இருக்கிறது. துணிச்சலுடன் எதையும் நீ செய்து முடிப்பாய் என்ற நம்பிக்கையும் எங்களுக்கு ஏற்பட்டு விட்டது. எனவே தான் இந்த வேலையைச் செய்யும்படி மன்னர் கட்டளை இட்டிருக்கிறார்,'' எனவே, ஜெயசீலனும் ''ஆ! நான் அதன்படி நடக்கிறேன்'' என்றான்.

அப்போது ஒரு வீரன் ஒரு முத்துமாலையையும், உடைந்து போன ஒரு வாளையும் கொண்டு வந்து மன்னனுக்குக் காட்டி ''அரசே! இவை இளவரசரும் இளவரசியும் காணாமல் போன இடத்தில் ஒரு மரத்தினருகே கிடந்தனவாம். இவற்றை ஒரு மலைவாசி கண்டெடுத்திருக்கிறான். அவன் தன் நினைவை இழந்து கிடக்கிறான்,'' என்றான்.

*(தொடரும்)*



25 ஆண்டுகளுக்கு முன் வெளியான கதை

# சன்னியாசி என்பவன் யார்?

ராமய்யன் தனக்கு இல்வாழ்க்கை பிடிக்கவில்லை என்றும் சன்னியாசியாகி விடப் போவதாகவும் கூறினான். அவனது மனைவி அவனிடம் சன்னியாசியாக வேண்டாம் என்று கெஞ்சினாள். ராமய்யனோ பிடிவாதமாக ''நான் சன்னியாசி யாகிவிடத்தான் போகிறேன்'' என்று கூறினான்.

மறுநாள் காலை அவன் சன்னியாசியாகும் நோக்கோடு வீட்டை விட்டுக் கிளம்பினான். அப்போது அவன் மனைவி ஒரு சிறு மூட்டையைக் கொடுத்து ''இதில் தயிர் சாதத்தைக் கட்டி வைத்திருக்கிறேன். உச்சி வேளையில் இதைச் சாப்பிடுங்கள்,'' என்றாள்.

வெகுதூரம் நடந்து உச்சி வேளையின் போது அவன் ஒரு மரத்தடியே உட்கார்ந்தான். பசி அதிகமாக இருந்ததால் அவன் தான் கொண்டு வந்த தயிர்சாத மூட்டையை அவிழ்த்தான். ஆனால் அதில் தயிர் சாதத்திற்குப் பதிலாக உமியும் தவிடும் தான் இருந்தது. அதைக் கண்டு அவன் கோபம் கொண்டு தன் வீட்டிற்குத் திரும்பி வந்து தன் மனைவியைத் திட்டலானான். அப்போது அவள் அமைதியாக ''சன்னியாசிக்குப் பசி எடுக்காது. கோபம் வராது. சாந்தமாக இருக்க வேண்டும்'' என்றாள். அதைக் கேட்ட ராமய்யன் அப்போதே சன்னியாசியாகும் எண்ணத்தைக் கைவிட்டான்.



நவீன
வேதாளக்
கதை

# மனமாற்றம் ஏன்?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் இந்த மயானத்தில் இப்படி நீ சிரமப்பட்டு முயற்சி செய்வதைப் பார்த்தால் நீ எதை நினைத்துக் கொண்டு இதைச்



பிஷேகம் செய்து மன்னனாக்கி ஆட்சிப் பொறுப்பை அவனிடம் ஒப்படைத்தான்.

இதற்கு இரண்டு வருடங்களுக்கு முன்பு தான் பானுவர்மனின் மனைவி இறந்து போனாள். இதனால் அப் போது முதல் அவன் எதிலும் நாட்டம் கொள்ளாமல் புராண, இதிகாசங் களைப் படிக்கலானான். அதனால் பக்தி மார்க்கத்தைத் தான் கடைப் பிடிக்க வேண்டும் என்ற எண்ணம் அவன்மனதில் தோன்றியது. ஆனால் அதிலும் அவன் மனம் ஈடுபட வில்லை. எனவே இல்லறத்தை விட்டு துறவறத்தை மேற்கொண்டு சாது சன்னியாசிகளோடு இருக்க வேண்டும் என்று அவன் மனம் எண்ணலாயிற்று. இதை தான் மிகவும் மதிக்கும் விநாயகசர்மா என்ற பண்டிதரிடம் கூறி அவரது அபிப் பிராயத்தையும் கேட்டான்.

அவரும், "நீங்கள் எண்ணியது மிகவும் சரியே. முக்தி மார்க்கத்திற்கு சாது சன்னியாசிகளின் சேர்க்கையே வேண்டும்," என்றார். அப்போது பானுவர்மன், "நான் பிறந்தது முதல் அரண்மனை சுகபோகங்களில் வளர்ந் தவன். இப்போது ஆசிரமத்தில் வாழ்வது எப்படி என்று தான் யோசிக் கிறேன்" என்றான். அதைக் கேட்ட விநாயகசர்மா சிரித்து, "பயப்படாதீர் கள். ஆசிரம வாழ்க்கை முதலில் சில நாட்களுக்கு சிரமமாக இருந்தாலும் நாளாக ஆக அது பழகிப் போய் விடும்" என்றார்.

மன்னனும் அதை ஏற்றுக் கொள்

செய்ய ஆரம்பித்தாயோ அதைக் கைவிட்டுவிட்டாயோ என்றே எண் ணத் தோன்றுகிறது. மெத்தப் படித் தவர்கள் கூட இவ்வாறு நடப்பது உண்டு. இதற்கு உதாரணமாக பானு வர்மன் என்ற மன்னனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

வெகு காலத்திற்கு முன் பிரபாசம் என்ற நாட்டை பானுவர்மன் நீதிநெறி வழுவாமல் ஆண்டு வந்தான். அவ னது ஆட்சியில் மக்கள் சுக வாழ்வு வாழ்ந்தனர். சண்டை சச்சரவு இல் லாமல் எங்கும் அமைதி நிலவியது. இப்படியாக ஆண்டுகள் கழிய, பானுவர்மன் கிழவனாகிவிட்டான். அவனது உடல் ஓய்வையே விரும் பியது. எனவே அவன் தன் மூத்த மகனான மணிபத்திரனுக்குப் பட்டா

வது போலத் தலை ஆட்டவே, சர்மாவும் ''இங்கிருந்து சற்று தூரத்தில் சந்தன வனம் என்ற காட்டுப் பகுதி உள்ளது. அங்கு அபேதானந்தர் என்ற யோகீஸ்வரர் தவம் செய்து கொண்டிருக்கிறார். அவருடைய ஆசிரமத்தில் கொஞ்ச நாள் தங்கிப் பாருங்கள்,'' என்றார்.

பானுவர்மன் தான் ஆசிரமத்திற்குப் போய் வாழப் போவது பற்றித் தன் மகன்களிடம் தெரிவிக்கவே, முதலில் அதை அவர்கள் கடுமையாக எதிர்த்தார்கள். அப்போது அவன் தனக்கு அந்த வாழ்வில் கஷ்டம் இருப்பதாகத் தோன்றினால் உடனே அரண்மனைக்குத் திரும்பி வந்து விடுவதாகக் கூறவே, அவர்கள் அவன் அங்கு செல்ல அனுமதித்தார்கள்.

பானுவர்மன் தன்னுடன் ஒரு வேலையாளையும் ஒரு சமையல்காரியையும் கூட்டிக் கொண்டு சந்தன வனத்திற்குச் சென்றான். அங்கு அபேதானந்தரின் குடிலுக்குப் பக்கத்தில் பானுவர்மன் தங்க ஒரு குடிசை போடப்பட்டது. அதில் ஒரு கட்டில் மெத்தென உள்ள படுக்கை விரிப்புடன் இருந்தது. அதனருகே ஒரு முக்காலி மீது தட்டில் பலவிதப் பழங்கள் இருந்தன. சுவாமி படங்கள் பலவும், ருத்திராட்ச ஜெபமாலையும் இருந்தன.

அன்றிரவு பழங்களைப் புசித்து விட்டு பானுவர்மன் படுத்து நன்கு தூங்கினான். மறுநாள் காலையில் அவன் அபேதானந்தரைத் தரிசிக்கச் சென்றான். அப்போது அவர் ஒரு



மாமரத்தின் கீழ் தியானத்தில் அமர்ந்திருந்தார். பானுவர்மன் சந்தடி செய்யாமல் அவரது ஆசிரம வாசலில் ஓர் ஓரமாக உட்கார்ந்தான். நேரம் போய்க் கொண்டே இருந்தது.

அபேதானந்தர் தாம் அமர்ந்திருந்த இடத்திலிருந்து அசையவே இல்லை. பொறுமையை இழந்த பானுவர்மன் எழுந்து அங்கும் இங்குமாக நடந்து சுற்றிலும் என்னென்ன இருக்கின்றன என்று பார்க்கலானான்.

சற்று நேரமானதும் யாரோ 'மன்னா' என்று கம்பீரமான குரலில் கூப்பிட்டது அவன் காதில் விழுந்தது. பானுவர்மன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். அங்கே அபேதானந்தர் புன்னகை புரிந்தவாறே நின்று கொண்டிருந்தார். பானுவர்மன் உடனே கைகூப்பி அவரை வணங்கினான்.



அவரும் 'நீடூழி வாழ்க' என்று அவனை ஆசீர்வதித்து அவனை அழைத்துக் கொண்டு போய் ஓரிடத்தில் உட்கார்ந்தார்.

அவனைத் தன் பக்கம் உட்கார வைத்துக் கொண்டு அவர் ''உன்னுடன் வந்தவர்கள் யாவரும் போய் விட்டார்களா?'' என்று கேட்டார். அவனும் ''இப்போது எனக்கு உதவ ஒரு வேலையாளும், உணவு தயாரிக்க ஒரு சமையல்காரியும் மட்டுமே உள்ளனர்,'' என்று தயங்கியவாறே கூறினான்.

பிறகு அவன் தொடர்ந்து, ''எனக்கு இந்தக் கானக வாழ்க்கை பழக்கப்பட்டுப் போனதும் அவர்களும் இங்கிருந்து போய்விடுவார்கள்,'' என்றான். பிறகு அவன் தான் சன்னியாசியாக ஆகிவிட விரும்புவதாகவும் அவரிடம் தெரிவித்தான்.

அதைக் கவனமாகக் கேட்ட அபேதானந்தர், ''அப்படியானால்நீ இங்கு வந்து வெகுநேரம் ஆகி விட்டதோ? இதுவரை என்ன செய்து கொண்டிருந்தாய்?'' என்று கேட்டார்.

அவனும் தயங்கியவாறே, ''வெகு நேரம் காத்து சலித்துப் போனதால் ஆசிரமத்தைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது பல வித எண்ணங்கள் என் மனதில் தோன்றின. இங்கு பழ மரங்களோடு பல மூலிகைகளும் உள்ளன. ஒரு முறை என் ராஜ வைத்தியர் வந்து இவற்றைப் பார்த்தால் எவ்வளவு பயனுள்ளதாக இருக்கும்! இவற்றைக் கொண்டு மருந்துகள் தயாரித்து என் நாட்டு மக்களுக்கு வரும் நோய்களைப் போக்கலாமே! அப்படிச் செய்யும்படி அவருக்குக் கட்டளை இடலாமா என்று யோசித்துக் கொண்டு இருந்தேன்,'' என்றான்.

அப்போது அபேதானந்தர், ''மன்னா! நீ திறமை மிக்கவன். அறிவாளி. இந்த ஆசிரம வாழ்வில் நீ படும் சிரமத்தை நீ தலைநகருக்குப் போய் ஏற்றுக் கொண்டு எப்போதும் போல ஆட்சி புரிந்து கொண்டிரு. இனி நீ சன்னியாசம் பற்றியோ அல்லது சந்தனவனம் பற்றியோ ஒரு போதும் நினைக்காதே!'' என்றார். பானுவர்மனும் அதற்கு எதிர்வார்த்தை எதுவும் கூறாமல் அபேதானந்தரின் கால்களில் விழுந்து வணங்கிவிட்டு தலைநகருக்குத் திரும்பிச் சென்றான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி, ''மன்னா! பானுவர்மனை அபேதா னந்தர் அறிவாளி எனக் கூறினாரே! அப்படிப்பட்டவனுக்கு சன்னியா சத்தை மேற்கொள்ளக் கூறாமல் தலைநகருக்குப் போகச் சொன்னது சரியா? மன்னனோ சன்னியாசி ஆகி விடவே வந்தான். ஆனால் அபேதா னந்தர் கூறியதைக் கேட்டு, ஆசி ரமத்திற்கு வந்த மறுநாளே பானு வர்மன் தலைநகருக்கு ஏன் திரும்பிச் சென்றான்? அவனுக்கு சன்னியாசி ஆகிவிட விருப்பம் இல்லாது போயிற்றா? இக்கேள்விகளுக்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகிவிடும்,'' என்றது.

விக்கிரமனும், ''மன்னன் சன் னியாசம் பற்றித் தீவிரமாக யோசி யாமல் ஆசிரம வாழ்வு பற்றியே யோசித்தான். மேலும் ஆசிரம வாழ்வு எப்படி எனப் பார்க்க எண்ணித் தான் வசதியாக வாழ வேலையாளையும் சமையல்காரியையும் வேறு அழைத் துச் சென்றான். அது மட்டுமல்ல. சற்று நேரம் கூட பொறுமையுடன் உட்கார்ந்திருக்கவும் அவனால் முடியவில்லை. மேலும் ஆசிரம வாழ்க்கையை மேற்கொள்ள வந் தவன் ஆட்சி பற்றியும் மக்களைப் பற்றி யுமே நினைத்தான். அமர்ந்து தியானம் செய்ய வேண்டும் என்று எண்ணவே இல்லை. ஆசிரமத்தைச் சுற்றிப் பார்த்து மூலிகைகளைக் கண்டதும் அவனுக்கு வைத்தியரின் நினைவும் தம் நாட்டு மக்களின் நினைவும் வந்துவிட்டது. சன்னி யாசம் மேற்கொண்டு மோட்சத்தை அடைவதை விட மக்களுக்குப் பணி புரிவதே சரி என அபேதானந்தர் எண்ணியே மன்னனைத் தலை நகருக்குப் போய் ஆட்சி புரியும்படிக் கூறினார். பானுவர்மனின் மன நிலையைப் புரிந்து கொண்டே அவர் அவ்வாறு அறிவுரை கூறி அனுப் பினார். அவர் செய்தது மிகவும் சரியே!'' என்றான்.

மன்னனின் சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பி வேதாளம் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# நம் இந்தியா

## வினாக்கள்

**எல்லோருக்கும் தேர்வுகள் இந்த ஏப்ரல் மாதத்தில் நடந்து முடிந்திருக்கும். ஒரு சிலருக்கு இன்னமும் முடியாதும் இருக்கலாம். எனவே இம்மாத வினாக்கள் ஒரு குறிப்பிட்ட இயலில் அல்லாமல் பொது வானவையாகக் கேட்கப்படுகின்றன.**

1. ஒலிம்பிக் போட்டிகளில் 400 மீ. ஓட்டப் பந்தயத்தில் மில்கா சிங் உலக சாதனையை நிகழ்த்தினார். இது எந்த ஆண்டில் எந்த இடத்தில் நடந்த போட்டியில் நிகழ்ந்தது?
2. தென்னிந்தியாவின் ஒரு சிறுநகரில் ஈடாஸ்கடர் ஓர் அறையில் மருத்துவமனையைத் துவக்கினார். அது இன்று மிகப் பெரியதாகி உலகப் புகழ் பெற்றுவிட்டது. அதன் பெயர் என்ன?
3. சென்ற ஆண்டில் இலக்கியத்திற்கான நோபல் பரிசை இந்தியரான வி.எஸ். நெய்பால் பெற்றார். 1971ல் இவர் புக்கர் பரிசை அடைந்தார். அவருடைய எந்த படைப்புகள் இந்தப் பரிசு கிடைக்கச் செய்தன?
4. இந்தியாவில் 1932ல் ஜே.ஆர்.டி. டாடா தான் விமானத்தை முதலில் ஓட்டி பம்பாயை அடைந்தார். அவர் எங்கிருந்து தம் விமானத்தை உயரச் செலுத்தினார்?
5. நாசிக்கையும் சேர்த்து இந்தியாவில் ஐந்து இடங்களில் கும்பமேளாக்கள் நடைபெறுகின்றன. நாசிக்கில் இது எந்த நதிக்கரையில் நடக்கிறது?
6. ஐக்கிய நாடுகள் சபையில் 1977ல் முதன்முதலாக ஹிந்தியில் சொற்பொழிவு ஆற்றியவர் யார்?
7. வங்காள ராஜப் புலி நம் தேசிய மிருகம். இதற்கு முன் தேசிய மிருகமாகக் கருதப்பட்டது எது?
8. அண்டார்ட்டிகாவில் 1982ல் இந்தியா தனது முதல் அடிப்படை தளத்தை நிறுவியது. அத்தளத்தின் பெயர் என்ன?
9. இந்திய மருத்துவமனை ஒன்றில் ரோனால்ட்ராஸ் பணி புரிந்தபோது மலேரியாவை உண்டாக்கும் கிருமி எது என்று கண்டார். அது எந்த மருத்துவமனை?
10. கடந்த இருநூறு ஆண்டுகளில் முதன்முறையாக இந்தியாவில் 1991ல் ஒரு எரிமலை வெடித்தது. அது எங்கே?

*(விடைகள் அடுத்த மாதத்தில்)*

## பிப்ரவரி வினாக்களின் விடைகள்

1. முனிவர்கள்
2. பார்வதி, கிரிஜா
3. கௌதம முனிவரின் மனைவி அகல்யை, ஸ்ரீராமர்
4. ஐராவதம்
5. உக்கிரசேனன்
6. கார்க்கோடகன்
7. ஹஸ்தினாபுர மன்னன் திருத ராஷ்டிரனின் மனைவி காந்தாரி
8. தண்டகாரண்யம்

## 27. கற்பிப்பதில் ஒரு புது வழி



அன்று சியாமளா தன் தாத்தா சோமநாதரிடம், ''தாத்தா! 'பிரஹத் கதா' என்பது தானே உலகிலேயே முதன்முதலில் தொகுக்கப் பட்ட கதைத் தொகுப்பு?'' என்று கேட்டாள். 'ஆம்' என்று அவர் கூறவே, சியாமளா ஒரு மாத இதழைப் பிரித்துக் காட்டி, ''இந்தப் பத்திரிகையில் பஞ்சதந்திரக் கதைகள் தான் உலகின் முதல் கதைத் தொகுப்பு எனக் கூறப்பட்டிருக்கிறதே. இது உண்மையா?'' என்று கேட்டாள்.

சோமநாதரும் ''அதுவும் ஓரளவு உண்மை தான். குணாத்தியரின் 'பிருஹத் கதா' பஞ்சதந்திரத்திற்கும் முந்தியது என்றே கருதப்படுகிறது. ஆனால் பிருஹத் கதாவின் பெரும் பகுதி நாசம் அடைந்துவிட்டது. அதன் மிகுந்த பகுதியைக் கண்டு சோமதேவர் பதினொன்றாம் நூற்றாண்டில் 'கதா சரித் சாகர'த்தைத் தொகுத்தார். பஞ்ச தந்திரக் கதைகள் மூன்றாம் நூற்றாண்டில் கூறப்பட்ட தாகக் கருதப்படுகிறது,'' என்றார்.

சியாமளாவும் ''அப்படியா!'' என்று ஆச்சரியத்துடன் கேட்கவே, சோமநாதரும் ''இவற்றில் எது முந்தையது, எது பிந்தையது என்ற

– பாரதீயன் –



விவாதமே தேவையற்றது. இரண்டுமே பழங்கதைகளின் தொகுப்புகளே. பஞ்ச தந்திரக் கதைகளின் ஆசிரியர் சோமதேவர். அவர் இக்கதைகளைக் கூறிய சம்பவமே ஆச்சரியத்தை அளிப்பது,'' என்றார்.

சியாமளாவும் ''பிருஹத் கதாவிற்கு ஏற்பட்ட கதியைக் கூறினீர்கள். அதுபோல பஞ்ச தந்திரக் கதைகள் பற்றியும் ஆச்சரியப்படத்தக்க விஷயம் உள்ளதா?'' என்று ஆவலுடன் கேட்டாள். சோமநாதரும், ''ஆம்! இருக்கிறது. அதைக் கூறுகிறேன், கேளுங்கள்!'' என்று சொல்லித் தொடர்ந்தார்.

மஹிலரூப்பியம் என்ற நாட்டை அமரசக்தி என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் தன் மூன்று மகன்களின் போக்கைக் கண்டு மிகவும் கவலைப்பட்டான். ஏனெனில் அவர்கள் கல்வி கற்க விரும்பவில்லை. அவர்களுக்கு அறிவுரைகள் கூறி உலக விவகாரங்களை எப்படித் தெரிய வைப்பது என்று யோசிக்கலானான்.

குருகுலத்திற்குப் போய் ஒரு குருவிடம் கல்வி கற்பது அவர்களுக்கு வேப்பங்காயாக இருந்தது. எப்படியும் அவர்களில் ஒருவன் தானே அவனுக்குப் பின் நாட்டை ஆள வேண்டும்? கல்வி அறிவே இல்லாத ஒருவனிடம் நாட்டை எப்படி ஒப்படைப்பது?

மன்னன் நாட்டிலுள்ள எல்லா அறிஞர்களையும் பண்டிதர்களையும் கூட்டித் தன் பிரச்சினையை அவர்களிடம் கூறினான். தனக்கு வழி காட்டுமாறு அவர்களிடம் வேண்டினான். அப்போது ஓர் அறிஞர் மன்னனிடம், ''நீங்கள் இதுபற்றி விஷ்ணு சர்மா என்ற மகாமேதையிடம் பேசி வழி காணுங்கள்!'' என்றார்.

மன்னனும் விஷ்ணுசர்மாவைத் தன் அரண்மனைக்கு வரவழைத்து தன் புதல்வர்களைப் பற்றிக் கூறவே, அவரும் ''கவலைப்படாதீர்கள்! அவர் களை வழிக்குக் கொண்டு வருகிறேன்'' என்றார். மன்னனும் அவர் கூறியதைக் கேட்டு திருப்தி அடைந்து அவருக்குப் பொன்னும் மணியும் ஏராளமாகக் கொடுப்பதாகக் கூறினான்.

அவரோ, ''அவற்றை நான் ஏற்க மாட்டேன். கல்வியை விற்பனைப் பொருளாக ஆக்கமாட்டேன்,'' என்று கூறி அவனது மகன்களுக்குக் கல்வி

புகட்டும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்.

விஷ்ணுசர்மா அரசகுமாரர்களை அரண்மனையிலேயே உள்ள ஓர் ஆலமரத்தடியே உட்கார வைத்து, ''சிறுவர்களே! ஒரு கதை சொல்கிறேன், கேளுங்கள்! கோதாவரி நதிக்கரையில் ஒரு சால மரத்திற்கு உலகின் பல பகுதிகளிலிருந்து பல விதப் பறவைகள் வந்து போய்க் கொண்டிருந்தன,'' என்று ஆரம்பித்து கதைக்குமேல் கதையாக தினமும் சொல்லலானார்.

அக்கதைகளில் நல்லவர்கள் கெட்டவர்கள், ஏமாற்றுபவர்கள், துரோகம் செய்பவர்கள், நயவஞ்சகர்கள், நேர்மையாளர்கள், அக்கிரமக்காரர்கள் எனப் பலவிதமானவர்கள் வருவது அரசகுமாரர்களின் மனதில் நன்கு படிந்தது. இக்கதைகளால் நேர்மை, நீதி, அநியாயம், தண்டனை என்பன எல்லாம் அச்சிறுவர்கள் மனதில் நன்கு பதிந்தன.

இவ்வாறு கதைகள் வாயிலாகவே விஷ்ணுசர்மா அந்த அரசகுமாரர்களுக்குக் கல்வி புகட்டினார். இப்படியாக அவர்கள் அரசியல், ராஜதந்திரம், மனோதத்துவம், சமுதாயம் என்பன பற்றி எல்லாம் அறிந்து கொண்டார்கள். பஞ்சதந்திரம் என்பதன் பொருள் ஐந்து விதத்தில் அறிவை அடைவது என்பதே பொருள்.

இவ்வாறு சோமநாதர் கூறி முடித்ததும் சியாமளா அவரிடம் பஞ்சதந்திரக் கதை ஒன்றைக்



கூறும்படி வேண்டினாள். அவரும், ''உங்கள் எல்லோருக்குமே சில பஞ்ச தந்திரக் கதைகள் தெரியும். தன் எஜமானனின் மூக்கின் மீது உட்கார்ந்த ஓர் ஈயை விரட்ட ஒரு குரங்கு ஒரு கத்தியை எடுத்து அவரது மூக்கில் அடித்து அவரையே கொன்ற கதை உங்களுக்குத் தெரியும்.

ஒரு குச்சியை ஆமை பற்றிக் கொள்ள அதன் இரு நுனிகளையும் இரு பறவைகள் கவ்விக் கொண்டு அந்த ஆமையைக் காப்பாற்றுவதற்காக ஆகாயத்தில் பறந்த போது அறிவற்று ஆமை வாயைத் திறந்து கீழே விழுந்து இறந்த கதையையும் அறிவீர்கள்.

மூன்று பேர்கள் சேர்ந்து தாம் பெற்ற சக்திகளால் இறந்து போன சிங்கத்தை உயிர்ப்பிக்கவே, அது

அவர்கள் மீது பாய்ந்து அவர்களைக் கொன்ற கதையும் உங்களுக்குத் தெரியும்,'' என்றார்.

சேகரும், ''ஓ! தெரியுமே. இவை யாவும் பஞ்சதந்திரக் கதைகளா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான். சோமநாதரும், ''ஆம். இன்னொரு பஞ்சதந்திரக் கதையைக் கூறுகிறேன். இரண்டு தலைகளுடன் கூடிய ஓர் அதிசயப் பறவை இருந்தது.

அந்த இரு தலைகளும் ஒன்றை மற்றது பாராதவிதமாய் எதிர் எதிராக அமைந்திருந்தன. ஒருநாள் அப் பறவையின் ஒரு தலை கொஞ்சம் அமிர்தம் ஒரு குடுவையில் இருப் பதைக் கண்டது.

அதை அது பருக நினைக்கையில், மற்ற தலை அதில் தனக்கும் கொஞ் சம் கொடு என்று கேட்டது. ஆனால் முதல் தலை கொடுக்கவில்லை. அதனால் ஆத்திரம் கொண்டு இரண்டாவது தலை விஷத்தைக் குடித்தது. அதனால் அந்தப் பறவை இறந்தது.

இந்தக் கதை கேட்பதற்கு வேடிக்கையாக இருப்பதாக நினைப் பீர்கள். ஆனால் இக்கதையில் கூறப் பட்டுள்ள சம்பவத்தை இன்று உலக நாடுகளில் நடக்கும் சம்பவங்களோடு ஒப்பிட்டுப் பாருங்கள். அப்போது உங்களுக்கு நன்கு புரியும்.

உலகம் என்பது உடல். நாடுகள் அதன் பல தலைகள். ஏதாவது ஒரு தலை உண்ணக் கூடாததை உண்டால் உடலே கெட்டுவிடும். ஏதாவது ஒரு நாடு விரும்பத்தகாத செயலைச் செய்தால் அதன் பயனாக உலகமே கெட்டுவிடும். இதை இக்கதையால் அறிகிறோம்'' என்றார்.

சியாமளாவும் சேகரும், ''ஆம்! இது இன்று எல்லா நாடுகளுக்கும் ஒரு பாடத்தைப் புகட்டுகிறது'' எனவே, சோமநாதர் அதுகேட்டு பெருமைப்பட்டார்.



இந்தியப் பண்டிகைகள்

# ஏப்ரலில் புத்தாண்டு ஆரம்பம்

நம் நாட்டின் பல பகுதி மக்களுக்கு ஏப்ரல் மாதத்தில் தான் அவரவர்களின் புத்தாண்டுகள் ஆரம்பமாகின்றன. ஓரிரு பகுதிகளில் இதை அறுவடை விழாவாகவும் கொண்டாடுகிறார்கள்.

## பைசாகி

பஞ்சாபிகள் தமது வருடப் பிறப்பான பைசாகியை ஏப்ரல் 13ல் கொண்டாடுகிறார்கள். எப்போதோ ஏப்ரல் 14ல் கூட பைசாகி வருவதும் உண்டு. இதை அவர்கள் அறுவடை விழவாகவும் கொண்டாடுகிறார்கள்.

இச்சமயத்தில் ரபி பயிர் அறு வடைக்குத் தயாராகி இருக்கும். எங்கும் பசுமையும் செழுமையும் நிறைந்திருக்கும். அதனால் மக்கள் குதூகலமாக இருக்கிறார்கள். பாட்டு டன் கூத்தும் எங்கும் உள்ளதைக் காணலாம். ஆண்களும் பெண்களும் பாங்க்ரா, கிட்டி ஆகிய நடனங்களை ஆடிக் களிக்கிறார்கள்.

இச்சமயத்தில் யாவரும் வண்ணப் புத்தாடைகளைத் தம் வழக்கப்படி அணிகிறார்கள். இப்பண்டிகை அநேகமாக நதிக்கரைகளில் கொண்டாடப்படுகிறது. புதிய கோதுமையை மாவாக்கி ரொட்டி (சப்பாத்தி) செய்து அத்துடன் நெய்யையும் வெல் லத்தையும் சேர்த்து சாப்பிடு கிறார்கள். நெருப்பை மூட்டி அதைச் சுற்றி நடனமாடி மகிழ்கிறார்கள்.



சீக்கியர்களுக்கு இந்த நாள் கால்சா இயக்கத் தொடக்க நாள். இந்த நாளில்தான் பத் தாவது சீக்கிய குருவான கோவிந்தசிங் கால்சா இயக் கத்தை 1699ல் ஆரம்பித்து வைத்தார்.

# குடிபாட்வா

மகாராஷ்டிரவாசிகள் வருடப் பிறப்பை குடிபாட்வா எனக் கொண்டாடுகிறார்கள். இது சைத்ர மாதத்தின் முதல் நாள். இதுவும் அறுவடை விழாவே. புது தொழில்கள் இந்த நாளில் ஆரம்பிக்கப்படுகின்றன. இந்நாளில் அவர்கள் வெற்றிச் சின்னமான குடியைத் தம் வீட்டு முற்றங்களில் அலங்கரித்து வைக்கிறார்கள்.



குடி என்பது சிறு கலயமோ அல்லது பானையோ. இதை ஒரு கோலில் தலைகீழாக வைத்து அதைப் பட்டுத் துணியால் சுற்றி மலர்களாலும் மாவிலைகளாலும் அலங்கரிக்கிறார்கள். இவ்வாறு செய்தால் வீட்டில் கெடுதல் எதுவும் நேராமல் செல்வம் கொழிக்கும் என்பது அங்குள்ளவர்களின் நம்பிக்கை. இந்த குடி அன்று சூரியோதயத்திலிருந்து சூரிய அஸ்தமனம் வரை இருக்கும்.

இந்நாளில் புத்தாடைகள் அணிந்து விருந்துணவு உண்கிறார்கள். வீட்டு வாசல்களில் வண்ணக் கோலங்கள் போடப்படுகின்றன.

காலையில் வேப்பங்கொழுந்து கருவேப்பிலை, புளி, வெல்லம் ஆகியவை சேர்ந்த பச்சடியை முதலில் சாப்பிடுகிறார்கள். இது ரத்தத்தை சுத்தமாக்குகிறது என நம்புகிறார்கள்.

இந்த நாளில்தான் ஸ்ரீராமர் வாலியை வென்றதாக மராட்டியர்கள் கருதுகிறார்கள். இன்னும் சிலரோ உலகைக் காக்க மகாவிஷ்ணு இந்த நாளில்தான் மச்சாவதாரம் எடுத்ததாகக் கருதுகிறார்கள்.

# நப பர்ஷா

வங்காளிகள் வருடப்பிறப்பை பைசாக் மாதத்து முதல் நாளன்று கொண்டாடுகிறார்கள். இதை பௌல பைசாக் எனவும் கூறுகிறார்கள். வண்ணக்கோலங்கள் வாசலில் போட்டு கலசங்களில் புனித நீர் நிரப்பி தேங்காயையும் மாவிலைகளை வைத்து வழிபட்டு இனிப்புகளை வழங்குகிறார்கள்.

# ரங்கோலி பிஹு



அசாமியரின் வருடப் பிறப்பு ரங்கோலி பிஹு என்படுகிறது. இது ஏப்ரல் மாத மத்தியில் வருகிறது. இது வேளாண்மை ஆண்டின் ஆரம்பமாகவும் கருதப்பட்டு வயல்களில் தானியம் விதைக்கப்படுகிறது. இதை போஹாக் பிஹு எனவும் அவர்கள் கூறுகிறார்கள். நகைப்புச் சிரிப்பு, விளையாட்டு முதலியன இவ்விழாவின் முக்கிய அம்சங்கள்.

இளைஞர் இந்நாளில் கூடி பிஹு பாடல்கள் இசைத்து பிஹு நடனங்களை புரிகிறார்கள். டோல், தப்பட்டை போன்றவற்றை பக்கவாத்தியங்களாக அடித்து எருமைக் கொம்பினாலான குழலை ஊதுகிறார்கள்.

# விஷு



மலையாள வருடப் பிறப்பு விஷு எனப்படுகிறது. மலையாள மாதமான மேடத்தின் முதல் நாள்தான் இது விஷுக் காணியைப் பார்ப்பது என்பது இந்நாளின் முதல் நிகழ்ச்சி.

தங்கம், புது பச்சரிசி, புத்தாடைகள், வெள்ளரிக்காய் வெற்றிலை, பாக்கு, முகம் பார்க்கும் கண்ணாடி முதலியன இச்சமயம் பயன்படுத்தி செழுமையைக் காட்டுகிறார்கள். கொன்னை மலர், வேத சாஸ்திர புத்தகங்கள், நாணயங்கள் ஒரு வெண்கல உருளியில் வைக்கப்படுகின்றன. இது தான் காணி எனப்படுவது.

விஷு நாளுக்கு முந்திய இரவில் குடும்பத்தில் மிகவும் வயதான பெண்மணி விஷுக் காணியை அமைக்கிறாள். இதை விஷுவன்று முதலில்

பார்த்தால் வளமான வாழ்வு கிட்டும் என்று நம்பப்படுகிறது.

அன்று கோடிவஸ்திரங்கள் அதாவது புத்தாடைகள் அணியப்படுகின்றன. தம்மிடம் ஆசி பெறுபவர்களுக்கு முதியவர்கள் பணம் கொடுக்கிறார்கள். இனிப்புப் பண்டங்களை வழங்குகிறார்கள். 'விஷுக்கை நீட்டம்' என்று இதற்கு பெயர். சிறுவர் சிறுமியர் காசுகளைச் சேர்க்க உற்சாகத்துடன் போய் பெரியவர்களை வணங்குகிறார்களா. இப்படி சேர்த்த பணத்தைக் கொண்டு விஷு மேளாவை நடத்தி விருந்துண்டு களிக்கிறார்கள்.

# தமிழ் வருடப்பிறப்பு

தமிழ் வருடப்பிறப்பு புத்தாண்டின் சித்திரை மாதத்து முதல் நாளில் வருகிறது. இது ஏப்ரல் 14ம் தேதியில் வரும்.

இந்த நாளில் ஆலயங்களுக்குச் சென்று அர்ச்சனை செய்கிறார்கள். பஞ்சாங்கம் படிப்பது என்பதும்



அன்று நடைபெறுகிறது. அந்த ஆண்டில் நிகழப் போவதை இச் சமயத்தில் கூறுகிறார்கள்.

இந்த நாளில் உணவில் வேப்பம்பூ பச்சடியும் மாங்காய்ப் பச்சடியும் சேர்த்துக் கொள்ளப்படுகின்றன.

உணவில் இனிப்பு, புளிப்பு, கசப்பு ஆகியவை கலந்திருப்பது போல் வாழ்க்கையில் மேடு பள்ளங்கள் இருக்கும் என்பதை உணர்த்தவே இவ்வாறு செய்யப்படுகிறது.

இந்த நாளில் வீட்டை மெழுகிச் சுத்தம் செய்கிறார்கள். வாசலில் கோலம் போட்டு, வீட்டை மாவிலைத் தோரணங்களால் அலங்கரித்து மகிழ்கிறார்கள்.

# உகாதி

ஆந்திர பிரதேஷில் வருடப்பிறப்பு உகாதி எனக் கொண்டாடப்படுகிறது. யுகம்+ஆதி என வரும் யுகாதி என்ற சொல்லே உகாதி என வழக்கில் வந்து விட்டது.

சைத்ரமாதம் சுத்த பஞ்சமியன்று வரும் நாளை வருடப்பிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். இது வசந்த ருதுவின் ஆரம்பம். இச்சமயம் மரம், செடி கொடிகள் துளிர்விடுகின்றன.

பிரம்மதேவன் இம்மாதிரியான ஒரு வருடப்பிறப்பு நாளன்று தன் படைக்கும் தொழிலை ஆரம்பித்தான் என்று கருதப்படுகிறது. எனவே இம்மாநில மக்கள் இந்த உகாதி நாளில் புதிய தொழில்களை ஆரம்பிப்பது லாப கரமானது என்று கருதுகிறார்கள்.

வீடுகள் இச்சமயத்தில் மாவிலைத் தோரணங்களால் அலங்கரிக்கப்படுகின்றன. மக்கள் புத்தாடைகள் அணிந்து ஆலயங்களுக்குச் சென்று வழிபடுகிறார்கள். மாலையில் பஞ்சாங்கம் படிக்கப் படுகிறது. அன்றைய உணவில் உகாதி பச்சடி பரிமாறப்படுகிறது. இப் பச்சடியில் புதுப்புளி, மிளகாய் உப்பு, வேப்பம்பூ, மாங்காய் துண்டு, வெல்லம் ஆகியவை சேர்ந்து இருக்கும்.





மக்கள் நலனைப்பேணிக்காப்பவர் என்று அக்பர் சக்கரவர்த்தி பெயர் பெற்றவர். அவர் மனதில் எவ்வளவு பேர் நாணயமானவர்கள் என்ற கேள்வி எழுந்தது. இதை ஒரு நாள் தர்பாரில் அங்கிருந்த பிரமுகர்களிடம் கேட்டார்.

''இதை வெகு எளிதாகக் கண்டு பிடித்துவிடலாமே'' என்று பீர்பல் கூறினார். ''ஒரு விருந்தை வைத்து அதில் கலந்து கொள்ளும் ஒவ்வொரு வரும் ஒரு சொம்புபால் கொண்டு வந்து கொடுக்கவேண்டும் என்று அறிவியுங்கள்!'' என்றார்.





அக்பரோ, ''இதனால் எப்படி ஒருவர் நாணயமானவர் என்று கண்டுபிடிப் பது?'' என்று கேட்டார். பீர்பலோ ''நான் சொன்னபடிச் செய்யுங்கள். உங்கள் கேள்விக்கு விடை கிடைத்து விடும்'' என்றார்.

அக்பரும் பீர்பல் கூறியப்டியே அறிவித்தார். ஒரு குறிப்பிட்ட நாளில் விருந்து அளிக்கப் படும் என்றும் அதற்கு வருபவர் ஒவ்வொரு வரும் ஒரு சொம்பு பால் கொண்டு வந்து அரண்மனை வாசலில் வைக்கப்பட்டுள்ள பெரிய பாத்திரத்தில் கொட்டிவிட்டு அரண் மனைக்குள் விருந்திற்குச் செல்ல வேண் டும் என்றும் அறிவிக்கப்பட்டது.





குறிப்பிட்ட நாள் வந்தது மக்கள் வரிசையாக நின்று தம் கைகளில் சொம்புகளை வைத்துக் கொண்டிருந் தார்கள். ஒவ்வொருவராகச் சென்று சொம்புப் பாலை பெரிய பாத்திரத் தில் கொட்டிவிட்டு அரண்மனைக் குள் சென்றார்கள்.



கடைசி மனிதன் பாலை ஊற்றிவிட்டுச் சென்றதும் அந்தப் பெரியபாத்திரம் ஒரு மூடியால் மூடப்பட்டது. அந்தப் பாத் திரத்தை சில அரசாங்க வீரர்கள் தூக்கிக் கொண்டுபோய் அக்பர் முன் வைத்தார் கள். அப்போது அவருடன் பீர்பலும் சில பிரமுகர்களும் இருந்தார்கள்.



பீர்பல் அக்பரைப் பார்க்கவே அவரும் வீரர்களிடம் பாத்திரத்தின் மூடியை எடுக்கும்படிக் கூறினார். பிறகு அந்தப்பாத்திரத்தை அவர் எட்டிப்பார்த்தார்.



அக்பர் ''ஆ! ஒரே தண்ணீர்தான்'' எனக் கூவவே பீர்பலும் ''மக்களின் நாணயத்தை இந்தத் தண்ணீர் தெள்ளத் தெளிவாகக் காட்டிவிட்டது'' என்றார் சிரித்தவாறே.

# அறுபடாமல் அறுப்பது

விண்ணில் பறக்கும் ஒரு பொருள் தரையிலிருந்து கட்டுப்படுத்தப்படுகிறது. அதுதான் காற்றாடி எனப்படும் பட்டம். பட்டம் பறக்கவிடுவோர் அதில் கட்டி உயர ஏற்ற கண்ணாடித் தூள்களை பசையோடு சேர்த்துத் தடவிய மாஞ்சா நூலைத் தயாரித்துக் கொள்கிறார்கள்.

ஜெய்ப்பூர் மன்னர் சாவாய் ராம்சிங்-2 பட்டம் பறக்கவிடும் தம் உதவியாளருடன் தம் அரண்மனை மேல் தளத்திலிருந்து பட்டத்தை வானில் பறக்க விட்டுக் கொண்டிருந்தார். அப்போது எங்கிருந்தோ பறந்து வந்த பட்டம் அவரது பட்டத்தில் மோதி மன்னரின் பட்டத்து நூலை அறுத்து பட்டத்தை வீழ்த்தியது. மன்னர் அது எப்படி நடந்தது என்று விசாரித்த போது பட்டத்தை அறுத்த நூலின் மீது கண்ணாடித் தூளும் பசையும் கலந்து தடவப்பட்டிருந்தது தெரிந்தது. அந்த மாஞ்சா நூலைத் தயாரித்தவர்கள் சூடாமணி, காலுராம் என்ற இருவர். அவர்கள் தாம் முதலில் மாஞ்சா நூலைத் தயாரித்தவர்கள்.

# பெண் ஆதிக்கம்!

ஒரிஸ்ஸாவிலுள்ள இந்தக் கோயில் அலாதியானது. இதற்குக் காரணம் அங்குள்ள அர்ச்சகர்கள் அனைவரும் பெண்கள்தான்.

கேந்திரபாரா மாவட்டத்தில் சத்தியபயா என்ற இடத்திலுள்ள பஞ்சு பராஹி கோயில் 1300 ஆண்டுகள் பழமையானது. இந்த ஆலயத்தில் தான் அர்ச்சகர்கள் எல்லோரும் பெண்கள். ஆண்கள் யாரும் கர்ப்பக் கிருகத்திற்குள் போகக் கூடாது. கோயில் வழிபாடுகள் யாவும் அங்குள்ள தலேயி என்ற மீனவப் பிரிவு பெண்களே செய்கிறார்கள்.



# முன்னோர்கள் கலைஞர்களே!





சுவர்களில் குழந்தைகள் படங்களை வரைந்தால் அவர்களைக் கடிந்து கொள்ளாதீர்கள். ஏனெனில் நம் சிறப்பக் கலையைப் பழங்காலத்திலிருந்து சுவர்களில் சித்திரங்கள் வரைந்து வளர்த்து வந்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள்.

மத்தியப் பிரதேசத்தில் போபால் அருகே யுள்ள விந்திய மலைக் காடுகளிடையே பீம் பெட்கா என்ற இடத்தில் பல மலை குகைகளின் சுவர்களில் சித்திரங்கள் வரையப்பட்டிருக்கின்றன. வரலாற்று வல்லுநர்கள் இவை பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன் வரையப்பட்டவை என்று கூறுகிறார்கள்.

இச்சித்திரங்கள் அக்காலத்திய மக்கள் வாழ்ந்த விதத்தைக் காட்டுகின்றன. வேட்டையாடுதல், தேன் சேகரித்தல், முகமூடி அணிந்து நடனமாடுவது, பலவித ஆயுதங்கள், காட்டுக் கரடி, மான், சிங்கம், புலி, நாய் மிருகங்களின் சண்டை முதலியன சித்தரிக்கப்பட்டுள்ளன. இவை பெரும்பாலும் சிவப்பு, வெள்ளை வண்ணங்களில் உள்ளன. அங்கங்கே பச்சையும் மஞ்சளும் தென்படுகின்றன.

# நீரில் மற்போர்

நம் நாட்டின் சில பகுதிகளில் கி.பி. பனிரெண்டாம் நூற்றாண்டில் மால் ஸ்தம்பா என்ற ஒருவகை விளையாட்டு விளையாடப்பட்டது.

இது ஒரு வகை மல் யுத்தம். இரு மல்வீரர்கள் வேறு இரு மல்வீரர்களின் தோள்களில் அமர்கிறார்கள். அவர்கள் இரு மல்வீரர்களைத் தூக்கிக்



கொண்டு இடுப்பளவு நீரில் நிற்கிறார்கள். இந்தச் சண்டையில் சண்டை போடுபவர்களைவிட அவர்களைத் தூக்கி நிற்பவர்கள் பாடு திண்டாட்டம்தான். தோளின் மீது அமர்பவனின் எடை 130 கிலோ என்றால் அவனைச் சுமப்பவன் என்ன பாடுபடுவான் என்பதை நீங்களே ஊகியுங்கள்!

# இளவரசி மலர் மல்லிகை

*தக்காணப்பீட பூமியின் மேற்குப் பகுதியில் கர்நாடக மாநிலம் 192,000 சதுர கி.மீ கொண்டுள்ளது. இதன் கிழக்கே ஆந்திரப் பிரதேஷும், வடக்கே மகாராஷ்டிரமும், தெற்கே தமிழ்நாடும், கேரளமும் உள்ளன.*

*இந்தியாவின் பரப்பளவில் இது பதினாறில் ஒரு பங்காகும். கர்நாடக மாநில வாசிகளை கன்னடிகர்கள் என்கிறார்கள். அவர்களது மொழி கன்னடம். சிலர் இம்மாநிலத்தை கரிநாடு என்றும் வேறு சிலர் கருநாடு எனவும் கூறுகிறார்கள். கருப்பு மண் வளத்ததால் கரிநாடாம். அழகானது என்பதற்காக கருநாடு எனப்படுகிறதாம்.*

*இதன் தலைநகர் பெங்களூர். இது விஞ்ஞான நகரம் என யாவராலும் ஏற்கப்பட்டுள்ளது. எலெக்ட்ரானிக் தொழில்கள் இங்கு நிறைய உள்ளன. ஆசியாவிலேயே மிகவும் முன்னேறிவரும் நகரம் இது.*

காவேரி நதி மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு குன்றில் சிறு ஊற்றாகக் கிளம்பி அங்கிருந்து கீழே இறங்கி சமவெளியில் பாய்ந்து காடுகளையும், பசுமை நிறைந்த வயல்களையும் பூங்காக்களையும் வளமுற்றதாகச் செய்கிறது. பூங்காக் களில் மல்லிகை ரோஜா மற்றும்



பல்வித மலர்ச்செடிகளும் வளர்ந்து மனதைக் கவர்கின்றன. முன்பெல்லாம் இப்பகுதி மக்களைப் பாம்புகள் துன்புறுத்தி வந்தன. அப்போதிருந்த மன்னனுக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. அவனுடைய மகன் அப்பிரச்சினையைத் தீர்த்துவிடுவதாகக் கூறி சிலருடன் காடுகளில் திரிந்து பாம்புகளைக் கண்டதும் அவற்றைக் கொன்று வரலானான்.




ஒரு நாள் பல பாம்புகளைக் கொன்றதால் களைத்துப்போன அந்த அரசகுமாரன் ஒரு மரத்தடியே படுத்துத் தூங்கினான். அவனுடன் சென்றவர்கள் காவலாக இருந்தனர். அப்போது ஏழுதலை நாகப் பாம்பு ஒன்று அந்த மரத்திலிருந்து இறங்கி வந்து அந்த அரசகுமாரனை நோக்கிச் சென்றது. அப்போது அவனைக் காவல் காத்த வீரர்கள் வாட்களை உருவி அப்பாம்பைக் கொல்லப் போனார்கள். அப்போது அரசகுமாரன் கண் விழித்து அந்தப் பாம்பின் மஞ்சள் நிறக் கண்களைப் பார்த்தான்.

உடனே அவன் தன் ஆட்களிடம் ''அதைக் கொல்லாதீர்கள். அது ஏதோ கஷ்டப்படுகிறது. என்னவோ சொல்லவும் விரும்புகிறது'' என்றான். அப்பாம்பிடம் ''உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டான். பாம்பும் மனிதக் குரலில் ''அரசகுமாரா! ஏழு வருடங்களாக நான் தீராத தலைவலியால் அவதிப்படுகிறேன். இதை குணப்படுத்த முடியவில்லை. அதனால் என் கவனம் சிதறிப் போகவே, நான் இந்தக் காட்டிலுள்ள பாம்புகளை அடக்க முடியாமல் இருக்கிறேன். இந்த நாட்டிற்குத் தெற்கேயுள்ள அண்டை நாட்டு மன்னனுக்கு அழகான மகள் ஒருத்தி இருக்கிறாள். அவளது எடை ஏழு மல்லிகை மலர்களின் எடையேதான். அந்த மல்லிகை மலர் இளவரசி இதுவரை சிரிக்கவும் இல்லை. புன்னகை புரியவும் இல்லை. அவள் மட்டும் சிரித்தால் அவளது வாயிலிருந்து மூன்று மல்லிகை மலர்கள் வெளியே வந்து விழும். அவற்றை நான் முகர்ந்தால் என் தலை வலி போய்விடும்.

இதை நீ எப்படியாவது செய்தால்

# வரலாறு

கர்நாடகம் பற்றி சந்தரகுப்த மௌரியர் ஆண்ட கி.மு. 300ல் குறிப்பிடப்பட்டுள் ளது. சந்திரகுப்த மௌரியர் தன் வாழ்வின் கடைசி நாட்களில் நாட்டை விட்டு விட்டு ஜைன மதத்தைத் தழுவினார் என்றும் கர்நாடகத்திலுள்ள சிரவணபெளகோலா விற்குப் போய்ச் சேர்ந்தார் எனவும் நம்பப் படுகிறது. இதற்குப் பல நூற்றாண்டு களுக்குப் பின்னரே 17 மீ. உயரமுள்ள கோமடீஸ்வர் சிலை சிரவணபெளகோலா வில் நிறுவப்பட்டது.



உன் நாட்டில் பாம்புகளால் எவ்விதத் தீங்கும் நேராதபடி நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றது.

அரசகுமாரனும் தான் அந்த மல்லிகை இளவரசியைக் கண்டு அவளைச் சிரிக்க வைப்பதாகக் கூறிவிட்டு தெற்குப் பக்கமுள்ள அண்டை நாட்டிற்குச் சென்றான்.

அவன் பயணம் செய்தவாறே ஒரு பெரிய ஏரியைக் கண்டான். அதில் தண்ணீர் குடிக்க சென்ற போது அதில் கூண்டோடு எறும்புகள் விழுந் திருப்பதைக் கண்டான். அவன் சட்டெனத் தன் தலைப்பாகையை எடுத்து அதில் கூண் டோடு எறும்புகளைப் பிடித்து அவை நீரில் முழுகாமல் தரையில் போட்டான்.



எறும்புகள் எல்லாம் ஒரே குரலில் அரச குமாரனுக்கு நன்றி செலுத்தின. பிறகு அவை ''எங்கள் உதவி தேவைப்படும் என எண்ணினால் உடனே நீங்கள் எங்களை நினை யுங்கள். நாங்கள் வந்து உதவுகிறோம்'' என்றன. அவனும் சரியெனக்

கூறிவிட்டுத் தன் பயணத்தைத் தொடர்ந்தான்.

கொஞ்ச தூரம் போனதும் யாரோ முக்கி முனகிக் கொண்டிருப்பது அவன் காதில் விழுந்தது. அவன் அந்த ஒலி வந்த இடத்திற்கு சென்றான். அங்கு ஒரு பெரிய புளியமரம் விழுந்து இருக்க அதனடியில் ஒரு ராட்சஸன் சிக்கித் தவிப்பதை அவன் கண்டான். ராட்சஸனால் எழுந்திருக்கக் கூட முடியவில்லை. அரச குமாரன் தன் வாளால் கிளைகளை வெட்டி ராட்சஸனை வெளியே வரும்படிச் செய்தான்.

ராட்சஸனும் அவனுக்கு நன்றி செலுத்தி "என்னை சமயத்தில் வந்து காப்பாற்றினாய். அதனால் நீ என்னை எப்போது நினைத்தாலும் உடனே வந்து உனக்கு உதவி செய்வேன்" எனக் கூறினான். அரசகுமாரனும் சரி என்று கூறிவிட்டு பயணத்தைத் தொடர்ந்து அண்டை நாட்டின் எல்லையை அடைந்தான்.

அவன் அங்கு முகாமிட்டு அந் நாட்டு மன்னனுக்கு "நான் உங்கள் நாட்டிற்கு வடக்கிலுள்ள அண்டை நாட்டு மன்னனின் மகன். நான் உங்கள் மகள் மலர் மல்லிகாவை மணந்து கொள்ள விரும்புகிறேன்" என்று செய்தி சொல்லி அனுப்பினான்.

அந்நாட்டு மன்னனும் தன் மகளை மணக்க அண்டை நாட்டு அரசனின் மகன் விரும்புவது அறிந்து மகிழ்ந்தான். அவன் உடனே அந்த அரச குமாரன் இருந்த இடத்திற்குப் போய் அவனை மரியாதையுடன் வரவேற்று "நீங்கள் என் மகளை மணக்கத் தகுதி பெற்றவரே. எங்கள் வம்ச பழக்கப் படி என்மகளை மணக்குமுன் நீங்கள் மூன்று வேலைகளைச் செய்தாக வேண்டும். ஒரு களஞ்சியத்தில் அரிசியும் உளுந்தும் கலந்துள்ளன. அதை

## தாவரங்கள்



குடகிலும் சிக்மகளூர் பகுதியிலும் விளையும் காப்பிக் கொட்டைக்குக் கார்நாடகம் புகழ் பெற்றது. ஷிமோகா சீயக்காய் விளைச்சலில் சிறந்து விளங்குகிறது. கர்நாடகம் வாசமிகு மலர்களுக்கும் மரங்களுக்கும் பெயர் போனது. சம்பங்கி, மல்லிகை ரோஜா மலர்களுக்கும் பலா, சந்தன மரங்களுக்கும் பெயர் பெற்றது.

வாசனை மசாலா திரவியங்களான ஏலக்காயும் மிளகும் மலைநாடுப் பகுதியில் ஏராளமாக விளைகின்றன.

அரிசி வேறு உளுந்து வேறாக ஒரே இரவிற்குள் பிரித்தாக வேண்டும் முதலில் நீங்கள் செய்து முடித்த பின் மற்ற இரண்டைக் கூறுவேன்'' என்றான்.

அரசகுமாரனும் குறிப்பிட்ட களஞ்சியத்தை அடைந்தான். அது மிக உயரமான குதிர். அதிலுள்ள அரிசியையும் உளுந்தையும் எப்படிப் பிரிப்பது என யோசிக்கையில் அவன் தான் காப்பாற்றிய எறும்புகளை நினைக்கவே அந்த எறும்புகள் உடனே வந்து குதிரிலிருந்த கலவையிலிருந்து அரிசியையும் உளுந்தையும் தனித்தனியாக்கி இரு குவியல்களாகக் குவித்தன. இந்த வேலை ஒரே இரவில் முடிந்து விட்டது.

காலையில் களஞ்சியத்திற்கு வந்த மன்னன் அரிசிக் குவியலையும் உளுந்துக் குவியலையும் கண்டு ஆச்சரியப்பட்டான். பிறகு அவன் அரசகுமாரனிடம் ''பேஷ். இது சரி. அடுத்து நீங்கள் நூறு மரக்கால் தயிர் சாதத்தை முழுவதும் ஒரேயடியாகச் சாப்பிட்டுவிட வேண்டும்'' என்றான். அதுகேட்டு அரசகுமாரன் அதையும் செய்வதாக்க கூறி தான் உதவிய ராட்சஸனை நினைத்தான். ராட்சஸனும் வந்து மலைபோல் குவிக்கப்பட்டிருந்த தயிர் சாதத்தை நொடியில் சாப்பிட்டுவிட்டான்.

மன்னனும் திருப்தி அடைந்து அடுத்த வேலையாக ''ஒரு குன்றின் மீதுள்ள மணியை அடித்து அந்த ஒலி அக்குன்றைச் சுற்றியுள்ள ஏழு நாடுகளுக்குக் கேட்கச் செய்ய வேண்டும்,'' என்றான்.

அரசகுமாரனும் ராட்சஸனிடம் அந்த வேலையையும் செய்யும்படி வேண்டவே, ராட்சஸன் அக்குன்றிற்குப் போய் மணியை அடித்தான். அந்த ஒலி ஏழு நாடுகளில் கேட்கப்பட்டது. மன்னனும் மகிழ்ந்துபோய் தன் மகளின் திருமணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்தான். திருமணமான பின் அரசகுமாரன் தன் மனைவியுடன் மன்னன் கொடுத்த ஏராளமான பரிசுகளையும் பெற்றுக் கொண்டு

## கலையும் கைவினைகளும்

சாகர், கும்மா, ஷோரமின் குடி மக்கள் சந்தனமரம், தந்தங்களில் கடைந்து சிற்பங்களை உருவாக்குவதில் புகழ் பெற்றவர்கள். சந்தன மர, ஈட்டி மரவேலைகளுக்கும் அரக்கால் செய்யப்பட்டிருக்கும் பொருள்களுக்கும் வாசனை திரவியங்களுக்கும் பட்டுத்துணிகளுக்கும் கர்நாடகத்தின் பெயர் உயர்ந்து நிற்கிறது.







# சுற்றுலாத் தலங்கள்

கர்நாடகம் சுற்றுலாப் பயணிகளின் சொர்க்கம். இயற்கை செயற்கைக் காட்சிகள் பல இங்கு உள்ளன. பண்டிஸ்பூர், நக்ரஹொளே விலங்கு கரணாலயங்களும் யானை, காட்டெருமை, மான், குரங்குகள் என்பனவற்றில் பலவகைகளில் காணலாம். ஷராவதி நதியில் அழகான ஜோக் நீர் வீழ்ச்சியைக் காணலாம். மைசூரிலும் அதனருகே அமைக்கப் பட்ட விருந்தாவனப் பூங்காவிலும் கண் கவர் காட்சிகளைக் காணலாம். மைசூர் அரண்மனை பெல்லாரிக் கோட்டை, சித்லதுர்க்கக் கோட்டை, பாதாமியிலும் அடிஹோனேயிலுள்ள தன் குகைக் கோவில்களும், ஹளேவீடுபேலூர் ஆகிய இடங்களிலுள்ள சிற்பக்கலையில் மிளிரும் கோவில்களும், கோமடீஸ்வரர் சிலையும், சாமுண்டி மலையிலுள்ள மிகப் பெரிய நந்தி சிலையும், ஹம்பிலுள்ள சஹாய் சாலர்ள் கட்டிய கோவில்களுடன் அவற்றின் இடிபாடுகளும் பீஜப்பூரின் கோல்கும்பஜ°ம் பார்க்கப் பார்க்கப் பரவசமூட்டபவை.

தன் நாட்டிற்குச் சென்றான்.

வழியில் சில வித்தைக்காரர்கள் குரங்குகளை ஆட்டுவித்த வேடிக்கையைக் கண்டு இளவரசி மல்லிகா விழுந்து விழுந்து சிரித்தாள். அப்போது அவளது வாயிலிருந்து மூன்று மல்லிகை மலர்கள் வெளியே வந்து விழுந்தன. அரசகுமாரன் அவற்றை எடுத்து பத்திரமாக வைத்துக் கொண்டான்.

வழியில் அவன் ஏழு தலைப் பாம்பை சந்தித்தான். மரத்தடியே நின்று அந்தப்பாம்பை அழைத்து தான் பத்திரமாக எடுத்து வைத்திருந்த மல்லிகை மலர்களை எடுத்து அதனிடம் கொடுத்தான். அந்தப் பாம்பும் அவற்றை முகர்ந்து பார்க்கவே அதன் நெடுநாளையத் தலைவலி போயே போய்விட்டது. அது ஒரு நாக ரத்தினத்தை எடுத்து அரசகுமாரனுக்குப் பரிசாக அளித்தது. பிறகு அது "நீ என் உதவியை எப்போது விரும்பினாலும் நான் உடனே உன் முன் வந்து நிற்பேன்" என்று கூறியது.

இவவாறு அரசகுமாரன் எறும்பு, ராட்சஸன் ஆகியோர் உதவியுடனும் மற்றும் பல நண்பர்களின் பலத்துடனும் நன்கு ஆட்சிபுரிந்து தான் மணந்த மல்லிகாவுடன் சுகமாக வாழ்ந்து வந்தான்.

# செய்திச்சுடர்

## விண்வெளிப் பயணச்சீட்டு




தென் ஆப்பிரிக்கப் பெருந்தொழில் அதிபர் மார்க்ஷெட்டில் ஒர்த் என்பவர் விண்வெளிக்குப் போக ஏற்கனவே 20 மில்லியன் அமெரிக்க டாலர்களைச் செலுத்தியுள்ளார்.

இதற்கு முன் அமெரிக்காவின் டென்னிஸ்டிட்டோ விண்வெளிக் கப்பலில் கட்டணம் செலுத்திச் சென்றதை 'நாசா' அமைப்பு அவ்வளவாக விரும்பவில்லை. ஆனால் இம்முறை 28 வயதான ஷட்டில் ஓர்த்திற்கு பயணத்திற்கான பயிற்சியை அளிக்கிறது. இவருக்கு ரஷ்யாவிலும் பயிற்சி அளிக்கப்பட்ட பிறகே பயணம் அனுமதிக்கப்படும். இது தொடர்பாக பிரிட்டன் கூட விண்வெளிக்குச் செல்ல விரும்புவர்களுக்கு 'விஸா' அளிக்க முன் வந்துள்ளது. மது, சிகரெட் போதை மருந்து ஆகியவற்றை பயன்படுத்துவோர் இப்பயணத்திற்கு அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

## செவ்வாய் கிரகப் பயணிகளுக்கு இசை



பீகள்–2 என்ற விண்வெளிப் பயணிகள் கூட்டம் 2003 டிசம்பர் 23ல் செவ்வாய் கிரகத்தில் அடி எடுத்து வைக்கும்போது பிரிட்டிஷ் பாப் இசைக் கலைஞர் ப்ளர் அமைத்துள்ள இன்னிசை அங்கு ஒலிக்குமாம்.

ப்ளரின் இசை இவ்வுலகிற்கும் அப்பாற்பட்டது என அவரது ரசிகர்கள் கருதுகிறார்கள். உண்மையிலே அவரது இசை இவ்வுலகிற்கு அப்பால் தான் ஒலிக்கப் போகிறது.

''பீகள் தரை இறங்கியது'' என்ற ஆரம்ப வரி கொண்ட ப்ளரின் இசை செவ்வாய் கிரகத்திலும் இவ்வுலகிலும் ஒலிக்கும்.



# விநாயகர்

பார்வதி தன் புதல்வனான பிள்ளை யார் கொடுத்த குரலைக் கேட்டு ஓடி வந்தாள். அங்கு தலை வெட்டப் பட்டு கிடக்கும் சிறுவனைப் பார்த்து சிவனாரிடம் ''இப்படிச் செய்து விட்டீர்களே! நம் மகனையே கொன்றுவிட்டீர்களே!'' என்று கண் ணீர் வடித்துக் கதறினாள். அதுவரை எல்லாவற்றையும் பார்த்துக் கொண் டிருந்த அங்கிருந்தவர்கள் கற்சிலை கள் போலாகிவிட்டனர். சிவனாருக் கும் உடல் வியர்த்துவிட்டது. வாடிய முகத்துடன் அவர் ''நம் மகனா? அது எப்படி?'' என்று கேட்டார்.

பார்வதியும் தான் எடுத்து வைத்த மருதாணி அறைப்பு எப்படிப் பிள்ளையாராகியது என்பதைக் கூறினாள். அதுகேட்டு சிவனார், ''ஓகோ! நீயே சிருஷ்டித்த மகனா! அதனால் தான் உன்னை 'அம்மா' 'அம்மா' என்று கூப்பிட்டானா? நம் மகன் என்று நீ சொல்வது சரி அல்ல,'' என்றார்.

அதுகேட்டு பார்வதி திடுக்கிட் டாள். அப்போது விஷ்ணு பிரம்மா விற்கு ஜாடை காட்டவே, பிரம்மா வும் முன் வந்து சிவனிடம் ''தாங்கள் பார்வதி தேவியை ஏற்றபோதே தங்களது தேஜசை பார்வதியார் உட லில் புகச் செய்தீர்கள். அப்போது முதல் உங்களில், பாதி பாகம் பார்வதி யாகவும் மற்ற பாதி நீங்களாகவும்



இருக்கிறீர்கள். எனவே இந்தப் பிள்ளையார் தங்கள் மகனே!'' என்று கூறினார். சிவனார் கைகளைப் பிசைந்தவாறே யோசனையில் ஆழ்ந் தார். பார்வதி தேவி கண்ணீர் வடித் துக் கொண்டிருந்தாள். அப்போது ஆகாயத்திலிருந்து ஓர் அசரீரி வாக்கு ''வடக்கு திசை நோக்கிப் படுத்திருக் கும் தலையை எடுத்து வந்து என் உடலில் பொருத்துங்கள். நான் உயிர் பெற்று எழுந்துவிடுவேன்'' என்று பிள்ளையாரின் குரலில் ஒலித்தது.

உடனே தேவர்களும் பிரமதா கணங்களும் கிளம்பிச் சென்றன. ஆனால் அவர்களுக்கு யாருமே வடக்கு திசையில் தலை வைத்துப் படுத்தவர் தென்படவில்லை. அவர் கள் தேடிக் கொண்டே சஹ்ய மலைப் பகுதியில் வில்வ வனம் ஒன்றை அடைந்தார்கள்.

அங்கு ஒரு வெள்ளை குட்டி யானை வடக்கு திசை நோக்கிப் படுத்துக் கொண்டிருந்தது. அது சிவனை நினைத்துத் துதித்துக் கொண்டும் இருந்தது. அந்த குட்டி யானை தேவலோக யானையான ஐராவதத்தின் மகனான கஜேந்திரன். ஒரு முறை இந்திரன் வந்தபோது அது அவனை லட்சியம் செய்யாமல் இருக்கவே இந்திரன் கோபமடைந்து அதனைக் கடிந்து கொண்டான்.

அப்போது கஜேந்திரன் பணிவுடன் ''என் தந்தை தான் தங்களிடம் பணி புரிபவர். அதற்காக அவர் மகனான நானும் உங்கள் வேலையாளைப் போல பணிந்து போக வேண்டுமா? அப்படி ஒன்றும் இல்லை,'' என்று சற்றும் பயப்படாமல் கூறியது.

''ஏய்! குட்டி யானையே! நான் யார் தெரியுமா? தேவேந்திரன்'' என இறுமாப்புடன் இந்திரன் கூறினான். அதற்கு கஜேந்திரனும் ''ஆமாம். நான் குட்டி யானை தான். நான் கஜேந் திரன். இது போல நாகேந்திரன், சிம் மேந்திரன் என்று பல இந்திரர்கள் இருக்கிறார்கள். நூறு யாகங்கள் செய் தால் போதுமே இந்திரப் பதவி கிடைக்க. தவம் செய்தாலும் இந்திரப் பதவி கிடைத்துவிடும். எனவே யாரா வது தவமோ யாகங்களோ செய்தால் உனக்கு பயம் ஏற்பட்டுவிடுகிறது. இந்திரப் பதவி அப்படி ஒன்றும் உயர்ந்ததோ அல்லது கிடைக்காத பொருளோ அல்ல!'' என்றது.

அதுகேட்டு இந்திரன் கோபம்

கொண்டு, ''உன் தலை துண்டித்துப் போகட்டும்'' எனத் திட்டினான். கஜேந்திரன் சிரித்தவாறே ''சிவனின் கட்டளை இல்லாவிட்டால் சிற்றெறும்பு கூட அசையாது. அப்படி என் தலை துண்டித்து விழுந்தால் நீயே அதற்கு வணக்கம் செலுத்த வேண்டி வரும். தெரியுமா?'' என்றது.

கஜேந்திரன் சிறந்த அறிவாளி என அறியாத இந்திரன் இறுமாப்புடன் ''போ, போ! அந்த சிவனையே நம்பி பூலோகத்தில் கிட,'' எனக் கூறி கஜேந்திரனை சொர்க்கலோகத்தில் இருந்து பூலோகத்திற்குத் தள்ளி விட்டான். கஜேந்திரன் சஹ்ய மலைப் பகுதியில் வந்து விழுந்தான். அவன் அங்கேயே இருந்து எப்போதும் சிவனையே தியானித்தும் வரலானான். சிவனார் வசிக்கும் வட திசையிலுள்ள கைலாச பர்வதத்தை நோக்கித் தன் தலையை வைத்துப் படுத்து வந்தான்.

தேவர்கள் இந்த கஜேந்திரனின் தலையை வெட்டி எடுத்து வந்து சிவனின் மகனான பிள்ளையாரின் உடலில் பொருத்தினார்கள். மறு நிமிடமே பிள்ளையார் யானை முகத்துடன் உயிர் பெற்று எழுந்தார்.

பார்வதியோ, ''ஆ! இதென்ன விபரீதம்? என் மகனுக்கு யானை முகமா?'' என வருந்திக் கண்ணீர் உகுக்கலானாள். அப்போது யானை முகத்தோரான பிள்ளையார் பார்வதி தேவியைப் பார்த்து, ''அம்மா! கவலைப்படாதே. நடக்க வேண்டியது நடந்திருக்கிறது. அன்று நீங்



களும் சிவனாரும் படுக்கை அறையில் இருந்தபோது சுவரின் மீது யானையின் உருவத்தைப் பார்க்கவில்லையா? அது நானே!'' என்றார்.

பார்வதியும் சிவனாரும், ''ஆ! அப்படியா!'' என்று கூவினார்கள். சிவனும் ''விக்கின விநாயகா! நீயே எங்கள் மகனாக வந்துவிட்டாயா! ஆகா, இதென்ன விளையாட்டு!'' என்றார். பிள்ளையாரும் ''ஆமாம். கஜாசுரனை ஒழிக்க ஏதாவது ஒரு வழி செய்து தானே ஆக வேண்டும்'' என்றார். சிவனும் ''ஆமாம். நான் யானைத் தோலை உடுத்து அதன் முகத்தை எப்போதும் அருகில் வைத்திருப்பதாகக் கூறினேன். அதையும் நிறைவேற்றவா இப்படிச் செய்தாய்?'' என்றார். பிறகு அவர் ''விக்கின விநாயகா! உன் விசுவரூபத்தைக்



காட்டு!'' எனவே, விநாயகர் ஆகாய மளவிற்கு உயர்ந்தார். அதில் நீர், நிலம், நெருப்பு, காற்று, ஆகாயம் என பஞ்ச பூதங்களும் பலவித வண்ணங்களும் கொண்ட யானையும் தெரிந்தன. பெரிய வயிறும் துதிக் கையும் கொண்ட விநாயகரை அவர் கள் பார்த்தார்கள். அவரது கைகளில் அங்குசமும், பாசமும் இருந்தன.

இந்திரன் முதலிய முப்பத்து முக்கோடி தேவர்களும் விநாயகருக் குத் தலைவணங்கி நின்றார்கள். அப்போது இந்திரனின் காதில் அன்று கஜேந்திரன் கூறிய 'என் தலை முன் நீ வணங்க வேண்டிய காலம் வரும்' என்ற சொற்கள் மெல்லிய குரலில் ஒலித்தன. விநாயகரின் தலை கஜேந் திரனுடையதே எனவும் தெரிந்தது. இந்திரன் தன் காதுகளைப் பிடித்துக் கொண்டு மூன்று முறை தோப்புக் கரணம் போட்டு பின் விழுந்து வணங்கி, ''கஜேந்திரா! நீ பெரிய அறிவாளி. நான் அறியாமல் செய்த பிழையைப் பொறுத்து மன்னித்து விடு!'' என வேண்டினான். தேவர்கள் யாவரும் தம் தலைவன் இந்திரன் செய்தது போலவே செய்தனர்.

விசுவரூபம் எடுத்த விநாயகரிடம் சிவனும், ''விக்கின விநாயகா! உன் இந்த உருவில் கணக்கில்லாத சிறப்பு களைக் காண்கிறோம். அவற்றைப் பற்றி நீயே கூறு!'' என்றார்.

விநாயகரும் ''சிவ பக்தர்கள் கூடி யுள்ளதே இந்த அகிலாண்டகோடி உலகம். நான் இந்த அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகர் சிவன் பார்வதியாரின் மகன். அவர்களுக்கு வணக்கம் செலுத்துகிறேன்'' எனக் கூறி மௌனமாக நின்றார்.

அப்போது பிரம்மா முன் வந்து ''விஷ்ணு மச்சாவதாரம் எடுத்து சோமகாசுரனைக் கொன்று வேதங் களை எடுத்து வந்து பாதுகாத்தார். அவற்றை விநாயகர் எனக்கு கொண்டு வந்து கொடுத்தார். அதனைப் படித்து என் அறிவு வளர்ந்தது. அப்போது தான் விநாயகரின் பல அருமை பெரு மைகளை நான் தெரிந்து கொண் டேன். நாம் நினைப்பதை அடையக் காரணமாக உள்ள விக்கின விநாய கரை முதலில் தியானித்துப் பிறகு சிருஷ்டித் தொழிலைத் துவக்கி னேன்,'' எனக் கூறி தொடர்ந்தார்.

''விநாயகர் விசுவரூபம் கொண் டவர் பஞ்சகணங்களான நீர், நிலம், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய



வற்றின் அதிபதி. எனவே, அவர் மகாகணபதி ஆனார். அவரது விசுவ ரூபத்தில் ஐந்து வித நிறங்களான வெள்ளை, நீலம், சிவப்பு, பச்சை, கருமை ஆகியவற்றை பஞ்சமகா பூதங்களின் நிறங்களாகவே கண்டோம். யானை கூரிய அறிவின் அறிகுறி. பெரிய தொப்பை இருந்தால் மட்டும் போதாது. கூரிய அறிவும் வேண்டும் என்பதைத் தான் விநாயகர் தம் உருவால் உணர்த்து கிறார். பழையன கழிதலும் புதியன புகுதலும் என்பதனையும் விநாயகர் உணர்த்துகிறார். விரைவிலேயே இவர் மூஞ்சூறு வாகனத்தின் மீது அமர்ந்து சுற்றி வரப் போகிறார். சூரிய சந்திர கிரகங்கள் ஒரு குறிப்பிட்ட வழியில் நின்று சென்று சுழல்வது போல ஒரு சிறிய எலி மீது யானையின் உருவில் அமர்ந்து செல்லும் அதிசயத்தை அறிவுறுத்தப் போகிறார் விநாயகர். இப்படிப்பட்ட சீரிய அறிவிற்குத் தாமே காரணம் என்பதனையும் எடுத்துக் காட்டு கிறார் விநாயகர்.

யானையை அடக்க அங்குசத்தைப் பயன்படுத்துவது போல உலகை அடக்கும் சக்தியும் மனோதிடமும் வேண்டும் என விநாயகர் தெரிவிக்கிறார். அறிவை யானையை அடக்குவது போலச் சரியான வழியில் செலுத்த உபயோகிக்க வேண்டும் என உணர்த்துகிறார். எல்லோரும் தர்ம நியாயங்களுக்குக் கட்டுப்பட்டு இருக்க வேண்டும் எனத் தம் கையிலுள்ள பாசக் கயிற்றால் தெரிவிக் கிறார். நிறைகுடம் போலத் ததும்பாமல் அடக்கமாய் இருக்க வேண்டும் என்பதை அவரது கலசம் அறிவுறுத்துகிறது. கோடாலி இன்னல்களைப் போக்கும் சின்னமாக உள்ளது. உலகில் ஏற்படும் சிறிய பெரிய சத்தங்களைக் கேட்க அவரது பரந்த செவிகள் உள்ளன. யானைக்

கண் சிறிதானாலும் எல்லாவற்றை யும் நன்கு பார்க்க வல்லது. எனவே அணுவில் இருந்து பிரம்மாண்டம் வரை எல்லாவற்றையும் அவர் கூர்ந்து கவனிக்கிறார்.

செழுமைக்கு விநாயகரே அதிபர். நிறைய சாப்பிடுபவர். ஆகாரத்தால் உடல் பலமும் புத்தி பலமும் ஏற் படும் என்பதை உணர்த்தி பழங்கள், பட்சணங்கள், இலை தழைகள் ஆகிய வற்றை ஏற்கிறார். எப்படிப்பட்ட இன்னல்களைப் போக்கும் விக்கின விநாயகரைப் பூசிக்க வேண்டும்.

இவர் தாம் ஐந்தாவது வேதமாகக் கருதப்படும் பாரதத்தையே உலகிற்கு அளித்தவர். இப்படிப்பட்டவரின் அருமை பெருமைகளை எடுத்துக் கூற யாராலும் முடியாது. எந்த வேலையை ஆரம்பிப்பதானாலும் விக்கின விநாயகரை முதலில் நினைத் துப் பூஜித்துவிட்டே ஆரம்பிக்க வேண்டும். அப்போது தான் அது நல்ல விதமாக முடியும். அதற்காக அவர் தம் அபயக் கரங்களை உயர்த் திக் காட்டுகிறார். எனவே இவர் மகா கணபதியாக எல்லோராலும் நினைத் துப் பூஜிக்கப்படுபவராகிறார்.

இவ்வாறு பிரம்மா கூறி முடிக் கவே, சிவனும் ''பிரம்மா சொன்னது வேதவாக்கு. எனவே விநாயகருக்கே முதல் பூஜை'' என்றார். எல்லோரும் 'ஆமாம்' என ஒருமனதாக ஆமோ தித்து ஒரே குரலில் கூறினார்கள்.

நாரதர் கானம் பாட, சரஸ்வதி தேவி வீணை மீட்டி கீர்த்தனம் வாசித்தாள். அப்போது பார்வதி தேவி விநாயகரை நமஸ்காரம் செய்யப் போக விசுவரூப மகா கணபதி ''அம்மா! வேண்டாம். தாய் மகனை வணங்குவது சரியல்ல'' எனக் கூறி தன் விசுவரூபத்தை அடக்கி முன் போல சிறு விநாயக ராகித் தாயின் காலடியில் நின்றார்.

தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். விநாயகரிடம் ''விக்கின விநாயகா! வினை தீர்ப்பவனே! இனி எந்த வேலையையும் ஆரம்பிக்குமுன் உன் னையே துதித்து இன்னல் எதுவும் இல்லாது நன்கு நடைபெற அருள் புரி என வேண்டுவோம்'' என்று கூறினார்கள்.





# உழைப்பதில் தான் சுகம்!

பல வருடங்களுக்கு முன் ஓர் ஊரில் சின்னைய்யன் என்ற விவசாயி இருந்தான். அவனது குடும்பம் மிகப் பெரியது. எல்லோரும் ஒன்றாக இருந்தார்கள். சின்னைய்யன் கஷ்டப் பட்டுத் தன் நிலத்தில் பயிர் செய்ய உழைத்ததோடு தன் குடும்பத்தவரிடமும் யாவரும் உழைத்தாலே சுகமாக வாழ முடியும் என்று தினமும் கூறி வந்தான். அவர்களும் அவன் சொற்படி நடந்ததால் அக்குடும்பம் சுகமாக வாழ்ந்து வந்தது.

அவனது வயலை ஒட்டி ஒரு பெரிய மாமரம் இருந்தது. உச்சி வேளையில் அவன் அதனடியில் அமர்ந்து உண்டு, இளைப்பாற நிழலையும் தந்தது. அந்த மாமரத்தில் ஒரு வன தேவதை வாழ்ந்து வந்தது. அது சின்னைய்யனும் அவனது குடும்பத்தவரும் வயலில் கடுமையாக உழைத்து வருவதை வருடக் கணக்கில் பார்த்து வந்தது.

ஒருநாள் அது சின்னைய்யனும் அவனது குடும்பத்தினரும் வயலில் நீண்ட நேரம் வேலை செய்ததைக் கண்டது. 'ஏழைக்குப் பணம் சம்பாதித்து சுகப்பட வேண்டும் என்ற ஆசை இருக்கும். ஆனால் அவனிடம் பணம் சேர்ந்துவிட்டால் சுகத்தை விரும்புவான். முன்போல உழைக்க மாட்டான். இப்படித் தான் அநேகமாக எல்லோரும் இருக்கிறார்கள். ஆனால் இந்த சின்னைய்யன் அன்று இருந்ததுபோல இன்றும் உழைக்கிறான். ஒரு வேளை இன்னும் அதிகமாகப் பணம் சேர்க்க வேண்டும் என்று ஆசைப்படுகிறானோ? இவனைப் பரீட்சிக்க வேண்டும்' என்று அது எண்ணியது.

வன தேவதை எண்ணியபடியே சின்னைய்யன் அதுவரை தான் சம்பாதித்துச் சேமித்த பணத்தைக் கொண்டு தன் வயலை ஒட்டியிருந்த நிலத்தை வாங்கினான். குண்டும்

- பாபநாசம் சாமா -



குழியுமாக இருந்த அந்த நிலத்தை ஒரு நல்ல நாள் பார்த்து தன் குடும்பத்தவர் யாவரோடும் சேர்ந்து சமப் படுத்தலானான். அதைக் கண்ட மாமரத்து வனதேவதை சின்னைய்யன் மீது இரக்கப்பட்டு அவன் முன் போய், ''சின்னைய்யா! நீயும் உன் குடும்பத்தவரும் ஆண்டு முழுவதும் வெயிலென்றும், மழையென்றும், பனி என்றும், குளிர் என்றும் பாராமல் இந்த வயலில் கஷ்டப்பட்டு வேலை செய்து வருவதை நான் பார்த்து வருகிறேன். நீ ஏன் இப்படிச் சிரமப்பட வேண்டும்? கூலியாட்களை அமர்த்திக் கொண்டு நீ விவசாயம் செய்யலாமே. உன்னிடம் போதிய பணம் இல்லை என்றாலும் நான் கொடுக்கிறேன்,'' என்றது.

சின்னைய்யன் வன தேவதையை வணங்கி, ''தாயே! நானும் என் குடும்பத்தவரும் வயலில் வேலை செய்து கஷ்டப்படுவதைக் காணச் சகியாக நீ, கூலியாட்கள் வயலில் வேலை செய்யும்போது கஷ்டப்படுவதைக் கண்டு மட்டும் சகித்துக் கொள்வாயா?'' என்று கேட்டான். தேவதையும், ''அவர்கள் தாம் வாழக் கூலி வேலை செய்து கஷ்டப்படுகிறார்கள். உனக்கோ நிலம் இருந்தும் நீயே பாடுபட்டு அதில் சுகம் காண்கிறாய். இது கண்டு நான் பெருமைப் படுகிறேன். ஆனால் நீ கஷ்டப்படாமல் சுகமாக இருக்க வழி செய்து கொள்ளலாமே!'' என்றது. அதற்கு அவன் ''தாயே! நான் கஷ்டப்பட்டு உழைப்பதைக் கண்டு தானே நீ என் மீது பரிவு கொண்டிருக்கிறாய்! எனக்குப் பணம் கொடுத்து என்னை வேலை செய்யவிடாமல் நீ உட்கார்த்திவிட்டால் அப்போது இந்தப் பரிவை நீ என்னிடம் கொள்வாயா? மாட்டாய். அதனால் எனக்கு உன் பணம் வேண்டாம்'' என்றான். அது கேட்டு வன தேவதை எதுவும் கூறாமல் மறைந்துபோயிற்று.

இரண்டு நாட்களாயின. சின்னைய்யன் தான் வாங்கிய நிலத்தில் உழுது கொண்டிருந்தபோது ஏர் முனை ஏதோ ஒன்றன் மீது படவே, 'டங்'கென்ற ஒலி கிளம்பியது. அவன் அந்த இடத்தைத் தோண்டவே, அங்கிருந்து ஒரு பித்தளைக் குடம் கிடைத்தது.அது நிறைய தங்க

நாணயங்களும் வெள்ளி நாணயங்களும் இருப்பதைக் கண்டான். அது கண்டு அவன் ஆச்சரியப்படாமல் அக்குடத்தை எடுத்துக் கொண்டு, மாமரத்தின் கீழ் போய் நின்று ''தாயே! வன தேவதையே!'' எனக் கூவி அழைத்தான். தேவதையும் அவன் முன் தோன்றவே, அவனும் குடத்தைக் காட்டி ''இதை நீ தானே எனக்குக் கிடைக்கச் செய்தாய்?'' என்று கேட்டான். தேவதை பதில் கூறாமல் புன்னகை புரியவே, அவனும் ''தாயே! என் வயலில் வேலை செய்யக் கூலி ஆட்களை அமர்த்திக் கொள்ள வேண்டும் என்று தானே நீ எனக்கு இதைக் கொடுத்தாய்? அப்படியே செய்கிறேன்'' என்றான். தேவதையும் ''செய்!'' எனக் கூறிவிட்டு மறைந்தது.

மறுநாள் சின்னையன் பத்து கூலியாட்களோடு தன் நிலத்திற்கு வந்தான். அதுகண்டு வன தேவதை மகிழ்ந்தது. ஆனால் அந்தக் கூலியாட்களோடு சின்னய்யனும் சேர்ந்து வேலை செய்வது கண்டு அது திகைத்தது. உச்சி வேளையின்போது அவர்களுக்கு அவன் தன் மனைவி தயாரித்துக் கொண்டு வந்த உணவைக் கொடுத்து உண்ணும்படிச் செய்தான். அவனும் அவர்களோடு சேர்ந்து அமர்ந்து உணவை உண்டான்.

அவர்களை அரைமணி நேரம் ஓய்வெடுக்கச் சொல்லிவிட்டுப் பிறகு அவன் அவர்களோடு சேர்ந்து மீண்டும் நிலத்தில் வேலை செய்யலானான். கூலியாட்கள் யாவரும்



உற்சாகத்துடனேயே தமக்குக் கொடுக்கப்பட்ட வேலைகளைச் செவ்வனே செய்து முடித்தார்கள். மாலையில் சூரியன் மறையும்போது வேலை நிறுத்தப்பட்டது. அப்போது சின்னைய்யன் தன் குடிசைக்குள் செல்ல, அதுவரை அவனது செய்கைகளை எல்லாம் கவனித்து வந்த வன தேவதை அவன் பின்னாலேயே அவனது குடிசைக்குள் சென்றது.

சின்னைய்யன் குடிசையில் துணியால் மூடி வைத்திருந்த பித்தளைக் குடத்திலிருந்து வெள்ளிக் காசுகளை எடுத்துக் கொண்டு வெளியே வந்தான். அவன் கூலியாட்களுக்கு நியாயமாகக் கொடுக்கப்படும் கூலியைக் கொடுத்தான். அவர்கள் எல்லாம் கூலியை வாங்கிக் கொண்டு போன

பின் அவன் மாமரத்தின் கீழ் போய், ''தாயே! வன தேவதையே!'' என்று கூவவே, வன-தேவதையும் அவன் முன் தோன்றியது. அப்போது ''பார்த்தாயா? இன்று கூலியாட்களை வைத்துக் கொண்டு வேலை செய்தேன். உனக்குத் திருப்தி தானே?'' என்று கேட்டான்.

வன தேவதையோ, ''திருப்தியா? நீயும் வயலில் கஷ்டப்பட்டு அவர்களோடு சேர்ந்து வேலை செய்தாயே! அதனால் நான் எப்படி சந்தோஷப் படுவேன்?'' என்று கேட்டது. அவனும் ''இன்று வேலை செய்ய வந்தவர்களில் இருவரைத் தவிர மற்றவர்கள் வயோதிகர்கள். அவர்களை யாரும் வேலைக்குக் கூப்பிடமாட்டார்கள். மற்ற இருவரும் உடல் ஊனமுற்றோர். அவர்களுக்கும் யாரும் வேலை கொடுப்பதில்லை. எனவே, அவர்களை எல்லாம் அழைத்து வந்து உற்சாகமூட்டி வேலை செய்ய வைத்தேன். நானும் அவர்களோடு சேர்ந்து வேலை செய்ததால் அவர்கள் முழுமனதுடன் வேலை செய்தார்கள். நீ எனக்குக் கொடுத்த பணத்தை எடுத்துத் தான் அவர்களுக்குக் கூலி கொடுத்தேன். என்ன, நான் செய்தது சரி தானே?'' என்று கேட்டான்.

வன தேவதையும் ''ஏழை பங்காளா! உன்னை நான் தவறுதலாக எடை போட்டுவிட்டேன். நீ மனிதருள் மாணிக்கம். நீ இப்படியே உன் வாழ்நாள் முழுவதும் இரு! உனக்கு வேண்டிய பணத்தை நான் கொடுத்து வருகிறேன்,'' என்றது. அதைக் கேட்ட சின்னைய்யன் தேவதையை வணங்கி, ''அப்படி செய்யாதே! பணம் பகைமையை உண்டாக்குவது. எனவே நீ எனக்குப் பணமே கொடுக்க வேண்டாம். நான் உழைப்பதில் தான் சுகத்தைக் காண்கிறேன். அந்த சுகமே என் சுகம். வேறு சுகம் வேண்டாம்,'' என்றான்.

வன தேவதையும், ''நீ கூறுவது உண்மையே! நீ நெடுங்காலம் இப்படியே சுகமாக வாழ்வாயாக!'' என ஆசிகள் கூறி மறைந்தது.





# குரைப்பது கடிக்காது!

கட்டையயன் தன் வெட்டரி வாளை ஒரு கல்லில் தீட்டிக் கொண்டிருந்தான். முந்தின நாள் அவன் தன் நிலத்தை அடுத்த நிலத்தின் சொந்தக்காரனான முத்தைய்யனுடன் கடும் வாக்குவாதம் புரிந்து பெரிய சண்டையும் போட்டான். அப்போது அவன், ''ஏய் முத்தையா! உன்னை நாளைக்கு வெட்டிப் போட்டுவிட்டுத் தான் மறு வேலை.'' என்று உரக்கக் கத்தினான்.

கட்டைய்யன் அரிவாளைத் தீட்டியவாறே முத்தைய்யனைத் திட்டிக் கொண்டே இருந்தான். அதை அவ்வழியே சென்றவர்கள் கேட்டு என்ன நடக்கப் போகிறது என்பதை வேடிக்கை பார்க்க அங்கே கூட்டமாகக் கூடினார்கள். அவர்களில் சிலர் தடுத்தும் அரிவாளைக் கையில் எடுத்துக் கொண்டு முத்தைய்யனின் வீட்டிற்குச் சென்றான்.

முத்தைய்யன் வீட்டில் இல்லாததைக் கண்டு அவனது வயலுக்கே கட்டைய்யன் சென்றான். கூட்டமும் அங்கு சென்றது. அப்போது முத்தைய்யன் தன் வயல்வரப்பில் உட்கார்ந்து கொண்டு வேப்பங்குச்சியால் பல் தேய்த்துக் கொண்டிருந்தான். அரிவாளுடன் வந்து கொண்டிருந்த கட்டைய்யனைப் பார்த்து அவன் கொஞ்சமும் பயப்படாமல் உட்கார்ந்தே இருந்தான்.

கட்டைய்யன் அரிவாளை ஆட்டியவாறே, ''அடே முத்தைய்யா! நான் வந்திருப்பது தெரியவில்லையா? தீட்டிக் கொண்டு வந்துள்ள என் அரிவாளைப் பார்! இந்த அரிவாளால் உன்னை வெட்டித் துண்டு துண்டுகளாக்கித் தூக்கி எறிகிறேன், பார்!'' என்று உறுமினான்.

கட்டைய்யன் முத்தைய்யனை வெட்டிக் கொன்றுவிடப் போகிறானே என்று பயந்த சிலர் கட்டைய்

- கி. அருணா -

யனைப் பிடித்து இழுத்துக் கொண்டு கொஞ்ச தூரத்திற்குக் கொண்டு போனார்கள். அப்போதும் முத்தைய்யன் தான் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து நகரவில்லை.

அப்போது மலையன் என்பவன் அவனிடம், ''என்ன முத்தைய்யா! பயப்படாமல் இப்படி உட்கார்ந்திருக்கிறாயே! கட்டைய்யனோ அரிவாளை ஆட்டிக் கொண்டு உன்னை வெட்டிக் கொன்றுவிடுவதாகக் கூறிக் கொண்டு குதிக்கிறானே. உனக்குக் கொஞ்சம் கூடப் பயம் இல்லையா? தைரியத்துடன் உட்கார்ந்திருக்கிறாயே!'' என்று கேட்டான்.

இதற்குள் கட்டைய்யன் தன்னைப் பிடித்துக் கொண்டிருந்தவர்களிடம் இருந்து திமிறி விடுபட முயன்று கொண்டிருந்தான். அவன் உரத்த குரலில் ''என்னை விடுங்கள்! அந்த முத்தைய்யனைக் கண்டதுண்டமாக வெட்டி எறிகிறேன்.'' அப்போது முத்தைய்யன் அவனை மலையனுக்குச் சுட்டிக்காட்டி, ''மலையா! நீ நேராகப் போய் கட்டைய்யனை விட்டுவிடும்படி அவனைப் பிடித்துக் கொண்டிருப்பவர்களிடம் கூறு! அவர்கள் அவனை விட்டதும் என்ன வேடிக்கை நடக்கிறது என்று நீயே பார்!'' என்றான்.

மலையனும் 'இதென்ன? முத்தைய்யன் தன்னைக் கொல்ல வரும் கட்டைய்யனை அடக்க வேண்டாம் என்று சொல்கிறானே! அந்த நிலை



யில் முரடன் கட்டைய்யன் முத் தைய்யனைக் கொன்றுவிடுவானே! இந்த முத்தைய்யனோ கொஞ்சமும் பயப்படாமல் அவனை விட்டுவிடும் படிக் கூறுகிறானே! இது எந்த விபரீதத்தில் போய் முடியுமோ?' என்று எண்ணினான்.

ஆனால் முத் தைய்யன் மறுபடியும் கட்டைய்யனைப் பிடித்து வைத் திராமல் விட்டுவிடும்படி அவர் களிடம் கூறும்படிச் சொல்லவே, மலையனும் போய் கட்டைய்ய னைப் பிடித்துக் கொண்டிருந்தவர் களிடம் முத்தைய்யன் சொல்லச் சொன்னதைத் தெரிவித்தான். அவர் களும் சட்டெனக் கட்டைய்யனை விட்டுவிட்டனர். அவன் நிலை தடுமாறி குப்புற விழுந்தான்.

கட்டைய்யன் எழுந்து அரிவாளை எடுத்து ஆட்டியவாறே, "அடே முத்தைய்யா! உன்னை விட்டேனா, பார்!" என்று கத்திக் குதிக்கலானான். ஆனால் இம்முறை அவனைக் கட்டுப் படுத்த யாருமே முன்வரவில்லை. அதனால் அவன் சோர்வடைந்து "அடே, முத்தைய்யா! இன்று உன்னை ஒன்றும் செய்யாமல் விட்டு விடுகிறேன். இன்னொரு நாள் உன் கதையை முடிக்கிறேன்" என்று கருவிக் கொண்டே அங்கிருந்து சென்றுவிட்டான். அப்போது அங் கிருந்தவர்கள் முத்தைய்யாவைச் சூழ்ந்து கொண்டு, "கட்டைய்யனை விட்டு விடச் சொன்னாயே! அவன் உன்னைக் கொன்றுவிடுவானென்று பயப்படவே இல்லையா?" என்று கேட்டார்கள்.

முத்தைய்யனும், "நீங்களே பார்த் தீர்களே, கட்டைய்யன் என்ன செய் தான் என்று! நீங்கள் அவனை விட்டு விட்டதும் அவன் என்னை ஒன்றும் செய்யாமல் ஏதோ கத்திவிட்டுப் போய்விட்டான். குரைக்கிற நாய் கடிக்காது. அதுபோல வார்த்தை களைக் கொட்டும் கட்டைய்யன் எதுவுமே செய்ய மாட்டான் என்பது எனக்குத் தெரியும்" என்றான்.

அதைக் கேட்ட யாவருக்கும் முத்தைய்யன் தைரியமாக ஏன்- இருந்தான் என்ற காரணம் புரிந்தது.



# அப்பா பரணில் இல்லை!



தென் கடற்கரையின் ஒரு கிராமத்தில் சின்னப்பன் என்ற வியாபாரி இருந்தான். அவனும் அவன் மனைவியும் தம் ஒரே ஆண் குழந்தையைச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தனர்.

சின்னப்பன் பஞ்சு வியாபாரம் செய்து வந்தான். ஒரு முறை பஞ்சு விலை மிகவும் குறைந்துவிடவே, உடனே அவன் தன்னிடம் இருந்த பணத்தோடு கொஞ்சம் கடனும் வாங்கி நிறையப் பஞ்சு மூட்டைகளை அடுத்துள்ள நகருக்குப் போய் வாங்கினான். அங்கு அம்மூட்டைகளை, ஒரு கிடங்கை வாடகைக்குப் பேசி அதில் வைத்துவிட்டுத் தன் ஊருக்கு வந்தான். அவன் தன் மனைவியிடம் "இப்போது பஞ்சின் விலை மிகவும் குறைந்திருக்கிறது. இன்னும் இரண்டு மாதத்தில் பஞ்சின் விலை ஏறிவிடும். அப்போது நான் பஞ்சை விற்று பல ஆயிரம் ரூபாய்கள் லாபம் அடையப் போகிறேன். இப்போது வாங்கிய கடனையும் அடைப்பேன்," என்று கூறினான்.

ஒரு மாதம் கழிந்தது. ஒரு நாள் காலையில் அப்பகுதியின் வானத்தில் அடர்ந்த கருமேகங்கள் சூழ்ந்தன. சில்லெனக் காற்று வீச மழை ஒரேயடியாக விடாமல் பல மணி நேரம் பெய்தது. புயலடித்துப் பல மரங்கள் வேரோடு பெயர்ந்து சாய்ந்தன. வீட்டுக் கூரைகள் காற்றில் பறந்தன. சின்னப்பன் வாடகைக்கு எடுத்திருந்த கிடங்கின் கூரையும் காற்றில் எகிறி

- கௌரிநாதன் -

அப்பால் போய் விழுந்து விடவே, அவன் வாங்கி வைத்திருந்த பஞ்சு மூட்டைகள் எல்லாம் மழையில் நனைந்து பாழாகிப் போயின.

இதைக்கண்ட சின்னப்பன் திகைத்துப் போனான். அவன் தன் மனதிற்குள் ''இப்போது என்ன செய்வேன்? கிடங்கிற்கு வாடகை கொடுக்க வேண்டும். கடனை அடைக்க வேண்டும். இதற்கு எல்லாம் பணத்திற்கு எங்கே போவேன்?'' என்று எண்ணிக் கவலைப்படலானான்.

அப்போது அவன் மனைவி, ''நீங்கள் இன்றே இந்த ஊரை விட்டுப் போய்விடுங்கள். இரண்டு மூன்று மாதங்களில் பணம் சம்பாதித்துக் கொண்டு வாருங்கள். கடன்களை அடைத்து விட்டுப் பிறகு வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்துங்கள்,'' என்று யோசனை கூறினாள்.



சின்னப்பனும் ''நீ கூறுவது போலவே செய்கிறேன்,'' எனக் கூறி, அவன் மறுநாள் காலை வீட்டிலிருந்து புறப்படு முன் தன் மகனான சிறுவனிடம், ''மகனே! நான் வெளியூர் போய்க் கொண்டிருக்கிறேன். திரும்பி வரும்போது உனக்கு விளையாட்டு சாமான்களை வாங்கிக் கொண்டு வருகிறேன்'' என்று கூறி விட்டுச் சென்றான்.

மூன்று மாதங்கள் முடிந்ததும் சின்னப்பனுக்குக் கடன் கொடுத்த செட்டியார் வந்து, ''சின்னப்பன் இல்லையா?'' என்று கேட்கவே, அவனது மனைவியும் ''அவர் வெளியூர் போயிருக்கிறார். வருவதற்கு ஒரு வாரம் ஆகும்'' என்றாள். அப்போது சின்னப்பனின் மகனும், ''ஆமாம். அப்பா வெளியூருக்குத் தான் போயிருக்கிறார். வரும்போது எனக்கு நிறைய விளையாட்டு சாமான்கள் வாங்கிக் கொண்டு வரப்போவதாகச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்'' என்றான். செட்டியாரும் அவனைப் பார்த்து சிரித்தவாறே, ''சரி, அடுத்த வாரம் வருகிறேன். அப்போது என் கடனை உன் கணவன் திருப்பிக் கொடுக்காவிட்டால் நடப்பதே வேறு'' என்று சின்னப்ப னின் மனைவியை எச்சரித்துவிட்டுச் சென்றார்.

அன்றிரவே கும்மிருட்டில் யாரும் பார்க்காதவிதமாய் சின்னப்பன் தன் ஊருக்குள் வந்து தன் வீட்டிற்குள் சென்றான். அவன் மனைவி அவனைப் பார்த்து ''பணம் கிடைத்ததா?'' என்று கேட்க, அவனும் ''இல்லை'' என்று கூறினான். அவள் ''இன்று காலையில் தான் செட்டியார் வந்து விட்டுப் போனார். ஒரு வாரம்

கழித்து வருவதாகவும், பணம் கொடுக்காவிட்டால் நடப்பதே வேறு என்றும் மிரட்டிவிட்டுப் போயிருக்கிறார்,'' என்றாள். சின்னப்பன் இனி வீட்டிலேயே அடைபட்டுக் கிடக்க வேண்டும் என்று கண்டு கொண்டான். ஏனெனில் செட்டியாரின் ஆட்கள் அவனது வீட்டைக் கண்காணித்துக் கொண்டே இருப்பார்களே!

ஏழாவது நாள் காலையில் சின்னப்பன் தன் மனைவியிடம் ''இன்று செட்டியார் வந்துவிடுவார். நான் அவர் கண்ணில் படாமல் பரணில் ஏறி ஒளிந்து கொண்டு விடுகிறேன். அவர் கேட்டால் நான் இன்னும் ஊரிலிருந்து வரவில்லை என்று சொல்லிவிடு!'' என்று கூறிப் பரணில் ஒளிந்து கொண்டான். இதை சின்னப்பனின் மகன் பார்த்து விட்டான்.

செட்டியாரும் சில ஆட்களுடன் சின்னப்பனின் வீட்டிற்கு வந்தார். அவர் 'சின்னப்பா' என்று கூப்பிட்டும் பதில் வராததால், அவரது ஆட்கள் கதவை 'தடதட'வென்று தட்டினார்கள். சின்னப்பனின் மனைவி கதவைத் திறந்து எட்டிப் பார்த்து செட்டியாரைக் கண்டு, ''இன்னும் அவர் வரவில்லையே. வேண்டுமானால் வீட்டிற்குள் வந்து பாருங்கள்!'' என்றாள். செட்டியாரும் வீட்டிற்குள் சென்று சுற்றிலும் பார்த்தார். எங்கும் சின்னப்பன் தென்படவில்லை.

அப்போது சின்னப்பனின் மகன் அங்கு வந்து அவரிடம், ''நீங்கள் என் அப்பாவுடன் ஓடி ஒளிந்து கொள்ளும் விளையாட்டா விளையாடுகிறீர்கள்? அவர் பரணில் ஒளிந்திருக்கிறார் என்பதை உங்களுக்கு நான் சொல்லமாட்டேன்'' என்றான் சிரித்தவாறே.

செட்டியார் நிமிர்ந்து பரணைப் பார்க்கவே, அங்கு சின்னப்பன் இருப்பது தெரிய சின்னப்பனும் கீழே இறங்கி வந்து நின்றான். செட்டியாரும் சிரித்துவிட்டு, ''நீ ஒளிந்து கொண்டாலும் கள்ளம் கபடு அறியாத சிறுவனான உன் மகன் காட்டிக் கொடுத்துவிட்டான்,'' என்றார்.



சின்னப்பனும் தன்னை மன்னிக்குமாறு வேண்டித் தன் நிலைமையை விளக்கினான். செட்டியாரும் ''சரி, இன்னமும் ஒரு மாத கால அவகாசம் தருகிறேன். அதற்குள் கடனைத் தீர்த்து விடு!'' எனக் கூறிவிட்டு அங்கிருந்து சென்றார்.



அம்புலிமாமாவின் அன்புளிப்பு
வீர தீர பராக்கிரமன்
13
ஓவியம் : பாணி
சந்திரபுரி மக்கள் தம் மன்னரை யாரோ கடத்திக் கொண்டு போய்விட்டார்கள் என்பதை அறிந்து கவலைப்பட்டார்கள். சேனாதிபதி நரேந்திரதேவன் மன்னன் இருக்கும் இடம் பற்றி விவரங்களை அறிய தாந்திரீகனான நாகபந்துவைக் காணக் காட்டிற்குச் சென்றான். ஆதித்தனைத் தேட அவனது படுக்கை அறைக்குள் சென்ற காவல் வீரர்கள் அடிபட்டு ஓடிப் போயினர்.




ரவீந்திரதேவன் ஆதித்தனிடம் காவல் வீரர்கள் வந்த போது அவன் எங்கே போனான் என்று கேட்டான்.
நீ அப்போது உன் அறையில் இல்லை. அது சரி, மன்னர் எங்கே இருக்கிறார் என்பதை இப்போது சொல்!
நான் இங்கேயே என் அறையில் தியானம் செய்து கொண்டிருந்தேன். அது சரி, உன் வீரர்கள் என்னைத் தேடி ஏன் வர வேண்டும்?




அது பரம ரகசியம் என்று முன்பே சொன்னேனே! நான் மன்னருக்குத் துரோகம் புரிய எண்ணவில்லை.
ரகசியமா? வீணாகப் பிதற்றாதே. நீ ஏதோ ஒரு மகத்தான செயல் புரிந்து காட்டவே அவரை எங்கோ மறைத்து வைத்திருக்கிறாய் என்று எனக்குத் தெரியும். அவர் எங்கள் மன்னர்!

ரவீந்திரதேவன் வாளை உருவிக் கொண்டு நிராயுதபாணியான ஆதித்தன் மீது பாய்ந்தான்.

ஆதித்தன் மின்னல் வேகத்தில் துள்ளி சற்று தூரத்தில் நின்ற ஒரு வீரனின் ஈட்டியை பிடுங்கிக் கொண்டான்.

உன் போன்ற கயவனை எப்படி அடக்குவது என்று எனக்குத் தெரியும்.

வாளை தூரத்தில் எறி!

ஆதித்தா! என்னைக் கொன்று விடாதே!

ஆதித்தன் ரவீந்திரதேவனின் வாளைப் பிடுங்கிக் கொண்டு வீரர்களைப் பார்த்தான். அவர்கள் பயந்து ஓடிவிட்டார்கள். ஆதித்தன் கதவை மூடி உட்புறமாகத் தாளிட்டான்.

ரவீந்திரதேவன் திகைத்துப் போனான். உயிர் போய்விடுமே என்று நடுநடுங்கினான்.







அறைக்கு வெளியே இருந்த வீரர்கள் அறைக் கதவை உடைத்துத் திறக்க ஒரு பெரிய மரத் துண்டைக் கொண்டு வந்தார்கள்.



ரவீந்திரதேவனை ஆசனத்தில் கட்டிப் போட்டபின்...



ஆதித்தன் திடீரெனக் கதவைத் திறந்தான். வீரர்கள் மரத்துண்டோடு அறைக்குள் 'பொத்'தென்று விழுந்தார்கள். அதே சமயம் சட்டென ஆதித்தன் அறைக்கு வெளியே வந்து அறைக் கதவை மூடித் தாளிட்டுவிட்டு மன்னரைக் காணச் சென்றான்.






சேனாதிபதி நரேந்திரதேவன் தன் ஆட்களோடு மலைக் காடுகளில் பயணம் செய்து இரண்டு நாட்களுக்குப் பின் பழைய கோயில் ஒன்றை அடைந்தான்.


தாந்திரீக நாகபந்துவின் பக்தர்கள் நாகபஞ்சமி விழா விற்காகச் சமர்ப்பிக்க காணிக்கைகளை வைத்துக் கொண்டு நின்றார்கள்.


நாகபந்துவின் சீடன் ஒருவன் புதிதாக வந்துள்ள நரேந்திரதேவனையும் அவனது ஆட்களையும் உற்றுப் பார்த்தான்.
தயவு செய்து குதிரைகளிலிருந்து இறங்கி எல்லோரையும் போல வரிசையில் நில்லுங்கள். எங்கள் குரு கட்டுப்பாட்டை கவனிப்பவர். அவர் சொல்வதைக் கேட்டு அப்படியே நடக்க வேண்டும்.
தொடரும்

# இனிய தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்!

## பார்த்தவர்கள் பாராட்டும்
## பாசத் தொடர் - பரிசுத் தொடர்.



## பெண்களுக்காகவே
## பல பரிசுத் திட்டங்கள்:

ஜெயா டி.வி.யிலே **எங்க வீட்டுப் பெண்** தொடரை தொடர்ந்து பாருங்கள்.
போட்டியில் கலந்து கொள்ளுங்கள்...
பரிசுகளை வெல்லுங்கள்...

B. நாகிரெட்டி வழங்கும்

விஜயா வாஹினி டெலிபிலிம்ஸ்

# எங்க வீட்டுப் பெண்






ஜெயா டிவியில்
ஒவ்வொரு திங்கட்கிழமை
இரவு 8.30 மணி முதல் 9 மணி
வரையில் குடும்பத்துடன்
கண்டுமகிழுங்கள்!




# போட்டோ வாக்கியப் போட்டி







**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/-

போட்டி முடிவு ஜூன் 2002 இதழில் வெளியிடப்படும்.

**போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,**
**எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,**
**ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.**



வாழ்த்துக்கள்

பிப்ரவரி 2002 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர்:

**ஆர். சுந்தரராஜன்**
36, ஆசிரியர் நகர்
, விபீஷ்ணபுரம்,
சிதம்பரம் - 608 401.

பரிசு பெற்ற வாக்கியங்கள்





கை கொடுக்கும் தளிர்
கை அணைக்கும் மலர்

அம்புலிமாமா வருட சந்தா :

இந்தியாவில் ரூ.120/-

Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited. No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

இப்போது நீங்கள்  வாங்கும் ஒவ்வொரு

# மைசூர் சாண்டல் பேபி சோப்புடனும்

ஓர் அழகிய சோப்புப் பெட்டி **இலவசம்***





சந்தன, பாதாம்
எண்ணெய்களால்
வளமாக்கப்பட்ட
மைசூர் சாண்டல்
பேபி சோப்

உங்களைப்
போலவே உங்கள்
பாப்பாவைப்
பராமரிக்கிறது.






சந்தனத்தின் நற்குணத்தை
கடந்த 80 வருடமாக
உங்கள் இல்லத்துக்குக்
கொண்டு வருகிறது
மைசூர் சாண்டல் சோப்.

* சலுகை சரக்குகள் தீரும்வரை மட்டுமே. **விரைவீர்!**

**சுத்தத்திற்கும் சுகாதாரத்திற்கும் மைசூர் சாண்டல் சோப்**

